உ

சிவமயம்.

சொரூபானந்தர்

அருளிச்செய்த

# சொரூபசாரம்.



இஃது

இந்திரபீடம் கரபாத்திரசுவாமிகள்

ஆதினத்துக்குரிய

ஈசூர் - சச்சிதானந்தசுவாமிகளால்

உரைசெய்யப்பட்டு,

சச்சிதானந்த சுவாமிகள் தருமபரிபாலன

சபையாரால்

சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.



இரண்டாவது பதிப்பு.

1900-ஞு

...ப்பற்ற ஞானப்பிரகாசசொரூபமே யெனக்குத் து... ...து, வேறன்றும் என்றவாறு.

ஆனவெலாமென்ற பன்மையால் செகசொரூபங்களெல்லாம், சாற்றவே என்பதி லேகாரம் அசைநிலை. சிற்சொரூபம், செகசொரூபம், தற்சொரூபம், செடச்சொருபம் என்பவற்றுட்போந்த சொரூபமென்பன: "ஒன்றொழி பொதுச்சொல்" என்னு மிலக்கணத்தால் பொருளமைந்தவாறு காண்க. யாம் இருக்கும் அண்ட ...க்கு இடமாகுமாறுபோன் றளவையிலடங்கா நட்சத்திரங்கள், ...ள் முதலிய பற்பல வண்டங்களாக ஆகாயத்திற் றோற்றுவனவனைத்தும் ...ரவர்க்கிடமாகுமெனக் கணித்தற்குமுரணென்னை? உளதேல், ககோள சாஸ்திர கணிதர்களா லியைந்த தூரதிருஷ்டிக் கருவிகள்கொண்டு கண்டுபிடித்த நில நீர் முதலிய குறிகளும், அவற்றுற் கணிக்கப்பெறும் கிரகணங்களும், உற்பாதங்களும், இன்னு மிவைபோல்வன பிறவும் ஆங்காங்குக் காணப்படாதிருக்கவேண்டும்; அங்ஙனமின்றே. ஆங்காங்கவ்வவ் வண்டங்களும் இவ்வண்டம்போல உயிர்களுக்குப் போகபூமியாகவேண்டும்; அன்றெனின், இவ்வண்டம் போகசாதனக்கருவி யின்றாகவேண்டும். இங்ஙனங் கூடாதெனின், அங்ஙனங்கூடாது. இது பிரத்தியட்சமெனின், ஆங்காங்குள்ளாரக் கவை பிரத்தியட்சமாமன்றோ? இதைமறுத்தல் கூடாது; ஆதலின் செகசொரூபமெலாமென்றார். சிற்சொரூபம் நிர்விகாரம், செகசொரூபங்கள் விகாரம். நிர்விகாரம் விகாரங்களானமைக்குச் சோதனை, ஞாயம், பொருத்தம் கூறுமாறு. ஞானமன்றி யஞ்ஞானம் வேறுளதேல் அஞ்ஞானத்தையன்றிச் ...மெனவும் வேறுளதாம். அங்ஙன மின்றெனின் மாறென்னையுளது? இங்கே ஞானமெனவும் அஞ்ஞானமெனவும் ஒருபொருளைப்பொருளாகக் கோடலும் அல்லவற்றைப் பொருளாகக்கோடலுமாம். அதாவது: அதிஷ்டானமெனற்கியைந்தது இனி யாதோ ரேதுவினுலு மாறாதியல்பிற் கியையாதது ஞானமெனவும், இயைந்தது அஞ்ஞானமெனவும் பொருடாக்கிடந்ததை கண்டு கருத்துப் பொருளையேனுங் காட்சிப்

குணகுணிவாதம், பிம்பப்பிரதிபிம்பவாதம், விகாரவாதமென்
வைந்து அபேதவாதமும், சுருங்கச்சொல்லவென்னும்பத்தமுகு
யது கூறன் முதலிய பத்துக்குற்ற நிவிர்த்தியு மமைந்த கிடப்பல
நுண்ணிய வுணர்வினானும், ஆழ்ந்த கேள்விப்பெருக்கானு முய்த்துண
ர்க. இனி விரிக்கிற் பெருகுமாதலின் சுருக்கியுரைத்தாம்.

---

## நூல்.

(அவதாரிகை)

ஞானப்பிரகாசமே யான்மாவெனின் சுசாதிகம், விசாதிகம், சுவ
கதம்பேதமென்னும் விகற்பபேதங்க ளற்றிருக்கவேண்டுமேயென்ற சங்
கைக்கு உத்தரம் இக்கவியிற் கூறுகின்றது.

பூதாதி யைந்து பொறிபுலன்க ளெல்லாஞ்சித்
தேதாதி யந்தமவை யெல்லாஞ்சித் - தோதரிய
கற்பனையுஞ் சித்தனைத்துங் காண்பானுங் காட்சியுஞ்சித்
தற்பமுமவே றில்லாமை யால்.

(இ-ரை) "பூதாதியைந்து பொறிபுலன்களெல்லாஞ்சித், தேதாதி
யந்தமவையெல்லாஞ்சித்து" எ-து. பூதமுதலியவைகளும், ஐந்துபொறி
களும், ஐந்துபுலன்களுமாகிய இவை யனைத்தும் ஞானமேயாம்; இஃ
தன்றியும் இவை யனைத்திற்குங் காரணமாகிய மூலப்பிரகிருதிமுதற
பஞ்சதன்மாத்திரை யிறுதியாகக் கிடந்தவை யனைத்தும் ஞானமே
யாம்; "ஓதரியகற்பனையுஞ் சித்தனைத்துங் காண்பானுங் காட்சியுஞ்சித்
தற்பமும் வேறில்லாமையால்" எ-து. யாவராலுங் கணித்தற்கரிய கற்
பனைகளெனப்பட்டவைகள் அனைத்தும் ஞானமேயாம், எல்லாவற்
றையும் காண்பானாகிய ஞாதுருவும் அந்த அவனறிவாகிய ஞானமும்
மெய்யுணர்வேயாம்; ஏனெனின் அந்த மெய்யுணர்வுக்கு யாதும்
வேறில்லாமையால்—எ - று.

தனித்தனி பயனிலையேற்கினும் ஒன்றாக்கினும் அமையுமென்றில் ஐயமிருப்பதால் உய்த்துணர்ந்து தலைமதத்துக்கொள்க. என்னை? "ஒருபொருண்மேற் பலபெயர்வரினிறுதி - யொருவினை கொடுப்பதனியுமொரோவழி" என்பதிலக்கணமாகலின். பிரக்ஞையன்றி அசத்தாத்திரயங்களும், காட்சித்திரயங்களும், அபிமானத்திரயங்களும் அபலோ? தனது விகாரமோ? ஆயவெனின், சோதனையில் தனதுவிகாரமாக முடியாதிருக்கவேண்டும்; விகாரமெனின், தனைத்தவிர விகாரம் வேறாயிருக்க இலையவேண்டும். ஆகலின் அனைத்துமெய்ப்பிமயமெனற்கு மாறென்னை? இன்றேற் கொள்ளற்பாற்று; அன்றேற்றள்ளற்பாற்று. தள்ளப்படுபவை சாற்றப்பட்டவைகளும் அன்னியமன்றாதலின் சுசாதிமுதலிய மூன்று பேதங்களுந் தனக்கின்மையால் ஞானப்பிரகாச மெய்யெனற்கு இக்கவி தக்க வுதாரணமென்க மெய்யறிவுபோல மெய்யறிவிலாமையின சுசாதிகபேதமும், மெய்யறிவுக்கு வேறாகச் சகமாதியின்மையின் விசாதிகபேதமும், அந்த மெய்யறிவு நிரவயவமாகவும், சங்கரகிதமாகவும், உபாதிரகிதமாகவும், சுதந்தரமாகவும் விளங்கலிற் சுவகதபேதமும் இன்மையால் ஞானப்பிரகாசம்போல்வதி வேறின்றென வஸ்துசோதனையாற் கணித்தாம். ஐந்தென்பதனைப் பூதத்திற்கும், பொறிகட்கும், புலன்கட்கு மொட்டுகவெல்லாமென்றது இவைபோல்வன பிறவுமெனக் கோடற்கு நின்றது. இவற்றிற்கெல்லாம் ஏதுவாய் நிற்றலின் மூலப்பிரகிருதி முதலியவற்றைக் கொண்டாம். காண்பானுங் காட்சியு மென்றதனாற் கற்பனையென்பதனைக் காணும்பொருளாகக் கொள்க. இக்கவியினது கருத்து அதிஷ்டான நிட்டையில்லார்க்கமையாது. என்னையெனின், பொன்னோட்டமில்லாதார்க்கும் பணியனைத்தும் பொன்னெனின் ஐயந்திரிபறுமாறுபோலுமென்க.

(அ-கை.)

அந்தப்பரவஸ்து சச்சிதானந்தமயமெனற்கு முன்கவியிற் சித்தே சத்தென்றதுபோல இக்கவி சத்தே சித்தெனவேலக் கூறுகின்றது.

புத்திவிகற்பத்தாற் பொருந்துசக பேதமெலாஞ்
சத்தியம்போற் றோன்றுவது சாட்சியன்றோ முத்திமுதற்
சுத்தமசுத்தஞ் சுகாசுகங்க ளுள்ளதில
தத்தனையுஞ் சத்தாத லால்.

(இ-ரை.) "புத்திவிகற்பத்தாற் பொருந்துசக பேதமெலாஞ் சத்தியம்போற் றோன்றுவது சாட்சியன்றோ" எ-து. ஐயந்திரிபுகள் தரு புத்தி விகற்பத்தினுல் பற்பல விகற்பபேதரூபமாக வெழும் சகமுதலிய பேதங்களனைத்தும் உண்மைபோற் காணப்படுவ தெவற்றிற்குஞ் சாட்சியாக விளங்கு மெய்யுணர்வாவதன்றோ? "முத்திமுதற் சுத்தமசுத்தஞ் சுகாசுகங்களுள்ள திலதத்தனையுஞ் சத்தாதலால்" எ-து. நிர்வாணநிலை முதல் கீழ்கொண் டுணரத்தகுஞ் சுத்தம், அசுத்தம், சுகம், அசுகம், உள்ளது, இல்லது முதலியனவும் இவைபோல்வன பிறவும் சத்தெனப்படுந் தன்மையாதலால்—எ-று

எழுவகைத்தோற்றங்களும் மீண்டு மண்ணாதலின் பிருதுவியின் கூறன்றெனலாகாது. பட்சிபேதங்களைச் சலசதி லூர்வன வெனவும், மனிதபேதங்களை மிருகபேதமெனவு மொன்றை யொன்றாகக் கூறற் பாற்றோ? அன்றெனவு மாமெனவுங் கோடற்கியைந்தது பிருதுவியெனின் கர்த்தத்துவம், அசேதனத்துவமுண்டாயிருப்பானேன்? இவ் விகற்பம் புத்திக்காதலின் 'புத்திவிகற்பத்தாற் பொருந்து சகபேதம்' என்றார். இவை யனைத்தும் புத்தியையன்றித் தாமோர் முதலன் றாதலின் 'சத்தியம்போற் றோன்றுவ' தெனவும், இவ்விகற்பஞ் சகலத்தி லன்றிக் கேவலத்தி லின்மையினுண்டெனவும் இன்றெனவும் சாட்சியாய்நின் றுணரத்தக்கது மெய்யுணர் வாதலால் அதனை 'சாட்சி' என்றார். விடுதிமுதற் பந்தம் இறுதியாகக் கிடந்தவற்றுள் இடையிலுள்ள நிலையனைத்துஞ் சிதாகாயப் பிரதிபலனமாதலின், 'முத்திமுதற் சுத்தமசுத்தஞ் சுகாசுகங்க ளுள்ள திலதத்தனையுஞ் சத்தாதலால்' என்றார். சிற்பிரகாசத்தைச் சாட்சியெனவும், சிதாகாயத்தைச் சத்தெனவும்

ற்கியையதலின் சத்தேசித்தென்றும். அனைத்துஞ்சிதாகாயப்பிரதி பிம்... மென்றறிந்தார் சிற்பிரகாசத்தாலன்றி வேறேதுவாலன்றாதலின் 'சத்தேசித்தெனவுஞ் சித்தே சத்தெனவும் அமையுமா றறிந் தைக்கிய நிலையுற்றுவர். ஏனையர் ஐக்யங்கொள்ளுமா றெங்ஙனம்? கொள்வரேனின் அசத்தைச் சத்தெனவும் சடத்தைச் சித்தெனவு மேற்றற்பாலர், ஆதலினாலும், ஐயந்திரிபகன்றா ரல்லராதலினாலும் அது மறுக்கற்பாற்று. அனுபவநிலையுணராதார் ஐக்கியஞ்சாதித்தல் சொல்லாலன்றிப் பொருளாலுமெனின் ஞானந்தப்பேறு அயலாசமுடிவதென்னை? இதுநிற்க. அறிவறியாமை யடுக்குகளும், உபாதான வுபாதேய வடுக்குகளும் கழற்றிப் பொருளுணர்த்தவறியாதார் அசிபதத்திற்கென் செய்வர்? "ஒன்றெனப் பலவென வறிவரும் வடிவினனின்ற - நன்றெழி ஞரண னான்முகன்' என்னுங் கவிக்குறையும், "எல்லாமாய் அல்லவுமாய்" என்னுங் கவிக்குறையும் எங்ஙன மையந்திரிபின்றிக் கூறவல்லார்? பொருளல்லவற்றைப் பொருளெனக்கொள்ளும் விபரீதிகளாதலி னென்க. எவ்விதப் பாஷாநிபுணரும் குணத்தைக் குணியெனவும் ஆதேயத்தை யதிஷ்டானமெனவும் கொடர்குணர்வு தரற்பாலது பாஷாஞானமாதலின் அஃதவர்க்கூறுஞ் சித்தாந்தப்பேறு முத்தி யன்றென்க. முத்தியைத் தாத்தக்ககல்வி வேறாயிருத்தலின் 'திரிவிதவுலகத்தரிதொருஞானி' என்றாரறிஞர். சத்துஞ் சித்து மொத்த நிலையைக் கூறியதென்பது கருத்து. என்னை? "சத்தேசித்தாகு மயலெனி லசத்தாம், அசத்தானாற் சாட்சியெங்ஙே, சித்தே சத்தாகு மயலெனிற் சடமாஞ் சடங்களுக்குத் திறியுமில்லை, யொத்தேதோன்றிய சத்துஞ் சித்து மல்ல சுகமாகு மூகத்துக் கோர், வித்தேயன்னியமாகிற் சடமசத்தாஞ் சுகானுபவமிலைநீங்கிட்டோதே" என்றார் தாண்டவராயசுவாமிகள். (உ)

(அ - கை.)

சத்துஞ்சித்து மொத்ததே ஞானந்தப்பேறாதலின் அதனை இக்கவி கூறுகின்றது.

பார்த்ததிசை யெல்லாம் பரிபூரணசொரூபந்
தீர்த்தமெல்லா மானந்த சிற்சொரூபங் - கீர்த்திக்குந்
தோத்திரங்க ளெல்லாஞ் சுகசொரூப நம்மையலால்
வேற்றுருவ மேதாகு மே.

(இ-ரை.) "பார்த்ததிசை யெல்லாம் பரிபூரண சொரூபந் தீர்த்தமெல்லா மானந்த சிற்சொரூபம்" எ-து. இங்ஙனமாய சுவாநுபவநிலை யெய்தினோனுக்கு அவன் சென்று கண்ட திசையனைத்தும், பரிபூரண சொரூபமாயும், அவன் சென்றாடிய தீர்த்தங்க ளனைத்தும் ஆனந்த சிற்சொரூபமாயும், "கீர்த்திக்குந் தோத்திரங்க ளெல்லாஞ் சுகசொரூப நம்மையலால் வேற்றுருவமேதாகும்" எ-து, புகழ்மையச்செய்யும் தோத்திரங்களனைத்தும் சுகசொரூபமாயு மிருக்கும்; இங்ஙனமாய அநுபவம் பேறனைத்தும் நம்மையன்றி வேற்றுருவ மெங்ஙனமாகும்?— எ-று.

ஏ - அசை. 'பார்த்ததிசையெல்லாம்' எனலைத் தலங்களெனவும் 'தீர்த்தமெல்லாம்' எனலைக் கங்கைமுதலிய நதிகளெனவும், 'கீர்த்திக்குந் தோத்திரங்களெல்லாம்' எனலை மூர்த்திகளெனவும் அமையக்கிடந்தமைகாண்க. எனவே, இவ்வநுபூதி நிலையுடையோனே மூர்த்திதலந் தீர்த்தமெனப் பெற்றாம். இந்தச் சுவாநுபவநிலை நமக்குமெய்தின் விகற்பவடிவங்களனைத்தும் ஆனந்தவடிவமாகக் காணுமாதலின் 'நம்மையலால் வேற்றுருவமேதாகும்' என்றார். சச்சிதானந்தமெனற்கு வஸ்துநிலை யிங்ஙனமாதலான் இஃதறியார் இம்மொழியைத் தாமெடுத்தாளுதலின் என்பயனும்? இதனினும் 'வாய்பொத்திக்கிடக்கை பிறர்மதிக்கைக்கு நன்கு சிறப்பு! இங்ஙனமாய்ந் துணர்ந்தாருக்குத் தமதானந்தப்பெருக்கே 'எங்கும் நிறைந்து காணுமெனற்கு மாறென்னை? உளதேல் கள்ள நாயகனு லெய்திய ஆனந்தப் பெருக்கு அலைவிடாம லெங்குமாகக் காணுதல் பொய்யோ? மெய்யோ? பொய்யெனின், வினைத்தொட்டி லெற்றிற்கு? ஆதலிற் சிற்றின்பத்தைக் காட்டிலும் பேரின்பமுளவிஞ்ஞானமயின் ஐயந்திரிபின்றி இஃதெவரு மேற்றற்பாற்று. இங்ஙனமாய பேர்

னையமாய்த்தவிடத்து ஆலிங்கனமுதலிய பலவாற்றாற் சிற்றின்பங் களைப் புகட்டினும் நினைத்தினையு மின்மையின், கண்ணபிரானை நித்திய ப்ரமசாரியென்றார். இஃதேற்றற்பாற்றோ? தள்ளற்பாற்றோ? தள்ளற்பாற்றெனின், சிற்றின்பப்பேற்றின் மிசசோர்க்குப் பேரின்பப் பேற்றை எங்ஙனமெடுத்துப்புகட்டினு மேவாமையென்னை? தற்பக்ஷத் திற்கே யிவ்வளவு மகிமையிருக்க அளவின்றிய பேரின்பவாழ்விற் கெவ்வளவு மகிமையிருக்கலாம்? ஆகலின் ஏற்றற்பாற்றெனக. அற்ப வின்பத்திற் குடைப்பொருளாவி தானிடத்து இதற் கென்னை கூறுவது? என்னை? "அசத்தி லெம்மட்டென்றம்மட்டும் பராமுகமாகினை யம்மட்டு, நிசத்தினுள் விழிப் பார்வையா லப்படி நிரந்தரப்பழக்கத்தால், வசத்தி லுன்மனோர்த்தி சின்மாத்திர வடிவமாயிடுவனமைந்து, சசத்த தேசத்தி லிருக்கினுமானந்தக் கடல்வடிவாவாயே" என்றுரைத்தார். அறிவே வடிவாகிய நம்மையன்றி வேற்றுருவமுளதேல் அனந்தமும் வேறுளதாம். அங்ஙன மின்மையெனின் இங்ஙனமுமின்றாம். இதனாற் ப்ரக்ஞானம் ப்ரம மென்ற ஐதரேயத்து வேத மகாவாக்கியத் துணிவென்க. அறிவே யானாற் சிறுவயதாதலின் ப்ரக்ஞானமே ப்ரமமென்றுரைப்பது கருத்து. (௯)

(அ - நை.)

இது வசனமாத்திரமாமெனின் அனுபவமு முண்டென இக்கவி கூறுகின்றது

அய்யா சகத்தோற்ற மாதார மெல்லா நீ
பொய்யாத சோதியெனப் போதித்தான் - மெய்யாக
வுற்றுணரி னென்னனுரையா லொருவிரிலை
பற்றுணர்வா னாமே முதல்.

(இ-ரை) "அய்யா சகத்தோற்றமாதாரமெல்லாநீ பொய்யாத சோதி யெனவும் போதித்தான்" எ-து. ஐயனே! சகத்தோற்றமதற் காதாரம் பாவிகனைக்கேட்ட மாணாக்கனை நோக்கி எல்லா விதங்களாலும் சிந்திக்கு

மிடத்து நீயேயாகும், அது பொய்யதன்று, நீ சுயஞ் சோதி வடிவமா தலினென்று வுபதேசித்தனன்; 'மெய்யாகவுற்றுணரி னுனென்று றொருவரில்லை, முற்றுணர்வாநானேமுதல்" எ-து. அதற்கு மாணாக்கனை, ஐயந்திரிபகற்றிச் சிரவணமனனாதிகளாற் சத்தியமாகச் சிந்தித்துணரு மிடத்து எங்கணு நானென்றுரையாதபே றொருவருமில்லை; ஆதலினு னென்பதைப் பரிபூரணமாக விளங்கும் உணர்வே வடிவாகக் கண்ட னன்; எல்லா நானும் இங்ஙனமாதலால் யானே யர்தாரென்னக் கூறி னன்—ஏ-று.

சகத்தென்றது சகத் தோற்றமென்றது கால தேச வஸ்துவை யன்றி ஓர் முதலன்றாதலின் பலவினிட்டம்பற்றியென்க. நானெனல் முன்னிலை யொருமைபற்றி. நீயென்றாயது விகாரமேனும் அறிவன் றோ? விவகரிப்பான்வேண்டித் தன்மையொருமை முன்னிலைப்படர் க்கையாயதென்க. சகம் வேறு, தோற்றம் வேறாயின் ஆறும் வேற்று மைத் தொகைமை யென்பம். தோற்றத்தையே ஒருமுதலாகவுடைமை யின் சகமாகியதோற்றமென இருபெயரொட்டுப் பண்பாக்குக. காரண நீயென்றது ஆதாரம் நீயென்றது: தோற்றன்மாத்திரப் பொருளாகிய அலையாதிகட்குச் சமுத்திரங் காரணமென்றதுபோலாம். அதுபோல அறிவாகிய சைதன்யம் தேகாதிப் பிரபஞ்சந் தோற்றி மறைதற்குத் தானமாயிருத்தலின் ஆதாரமெனல் பொருந்தும். ஆய்ந்து தெளியா தார்க்கு நீ சோதியெனல் பொருந்தாது. என்னை? "ஆயினறிவாயிருப் பார்காணம்மானை, ஆயாதபோ தலகாயிருப்பார்காணம்மானை" என்றார் தத்துவராயர். அயலாக நின்றுள்ள வுலைத்தும் சிற்பிரகாசந் தானாக விளங்கியவிடத்துத் தினைத்துணையு மில்லையென்பது கருத்து. (௪)

(அ-கை)

[illegible]மாயின் என்று பிராரத்தத்திற்கு ஏது வென்னையென்ற மாணாக்கனை நோக்கி இக்கவியி லுத்தரங் கூறுகின்றது.

நம்மையறி வேவடிவா நாங்கண்டோ நம்மையன்றிச்
செம்மை யுலகத் திரள்காணோம் - நம்மைநா
முற்றுப்பா ராதிருந்தோ மல்லா லொருகாலு
மிற்றுப்போ னோமோ வியாம்.

(இ-ரை.) "நம்மையறிவேவடிவா நாங்கண்டோ நம்மையன்றிச் செம்மையுலகத்திரள்காணோம்" எ-து ஐயனே! சுயஞ்சோதிவடிவாகிய அறிவாக நம்மை நாங் கண்டனம், அதனாற் செம்மையாக நின்றுள்ள உலகத்தோற்ற மனைத்தையும் நம்மையன்றி வேறாகக்கண்டிலம்; இங்ஙனம் என்றுங் காணுமைக்கு ஏதுவென்னையென்ற மாணுக்கனை நோக்கி ஆசிரியர் கூறுவது: "நம்மைநா முற்றுப் பாராதிருந்தோ மல்லா லொருகாலு மிற்றுப் போனோமோ வியாம்" எ-து. மாணுக்கனே! நீ கேட்டது மெய்யே; சிரகணுகிகளால் நாமிப்போ துற்றுணர்ந்தது போல எப்போது முற்றுணர்ந் திருப்பமாயின் இவ்வனுபவமாகவே விளங்குதும் இவ்வனுபவ நிலையின ராகிய யாமெக்காலத்திலும் இல்லா திருந்தனமல்லம். இங்ஙனஞ் சோதித்துப் பாராத குற்றமன்றி வேறு குற்றங்கண்டிலம — எ - று.

தன்மை பொருமையாகிய நாமென்பதைப்பற்றி முன்கவியிற் கூறியிருப்பதாற் றன்மைப்பன்மையும் அங்ஙனமாமெனக் கூறற்கு வழுவென்னை? இன்ருதலின் 'நம்மை யறிவே வடிவா நாங்கண்டோ நம்மையன்றிச் செம்மையுலகத் திரள்காணோம்' எனவும், இந்நிலை எப்போதும் நமக்கில்லாதது இப்போது விசாரித்துணர்ந்தவாறுபோல எப்போதும் விசாரித்துணராமையின் 'நம்மைநாமுற்றுப்பாராதிருந்தோம்' எனவும், இஃதன்றி வேறுகுற்ற மில்லாமையின் என்றும் இருந்திருப்போமென்பார் 'ஒருகாலுமிற்றுப்போனோமோவியாம்' எனவுங் கூறிய வாறுகாண்க. வாச்சியார்த்தமே யில்லாதார், இலட்சியார்த்த மெதுவெனு முறலுஞ் சுயஞ்சோதிவடிவாகாவிடத்து எவர்க்கு மிஃதுடன்பாடன்று; அந்தர்முக நாட்ட மில்லாமையா லென்க. நம்மை நாமுற்றுப்பார்க்கு

முறைமை அல்லவற்றை நாமெனக் கொள்ளாது சென்று ஏகமா அனுபவித்துத் தேய்ந்து தேய்ந்து முப்பாழையு மகன்றப்பால் ஞானரகிதமாய்த் தன்னைத்தான் செலுத்தவென்க. இடைவிடாது[illegible]ப் பார்க்கின் இடைவிடாது விளங்குது மென்பது கருத்து. (௫)

அ - ரை.)

ஆயின், நாமென்னப்பதொன்றோ பலவோ? என்ற மாணாக்கனை நோக்கிப் பகிர்முகத்தால் பலவெனவும், அந்தர்முகத்தா லொன்றெனவும் உதாரணமுகத்தா லுத்தரங் கூறுகின்றது.

எல்லாரு நானு விருந்துரைப்பா ராகிறமை
யல்லாம லீச னளவுமலர் - சொல்லாலே
பெற்றமகன் றம்பிப் பிதாப்பே ருரைத்தொருவற்
குற்றவுடல் வேறுருகு மோ.

(இ-ள்) "எல்லாருநானுவிருந்துரைப்பாராகி றமையல்லாமலீச னளவுமலர்" எ - து. என்னை யான் விசாரித்துத் தெளிந்தவாறுபோன்று யாவருந் தன்னைத்தான் ஐயந்திரிபறவுணர்ந்திருந்து தத்தநிலைமைச்சொல்லவல்லராயும் அவர்கடத்தமையன்றி ஈசனென்னுஞ் சொல் பரியந்தம் வெவ்வேறு பொருளுடைய ரல்லர். எங்ஙனமெனின், 'சொல்லாலே பெற்றமகன்றம்பிப் பிதாப்பேருரைத்தொருவற் குற்ற வுடல் வேறுருகுமோ" எ-து. ஒருவன் றன்றந்தைக்குத் தன்னை மகனெனவும், தன்றமையனுக்குத் தன்னைத் தம்பியெனவும், தன்மகனுக்குத் தன்னைப் பிதாவெனவும் பேர்கொண்டு பாவிக்கின் அவனுக்கு வாய்த்த வுடல் அவன் பாவனைப்படி வெவ்வேறாகுமா? ஆகாதே, அதுபோல வென்றறி — எ - று.

பிரமா முதற் பிபீலிகாந்தவரையு நானென்றுதாரெங்களுமில்லை உபாதிசகித நாட்டத்தாற் றிணைபாலிட மேற்கினும் யாதும் நிலையன்மையின் உபாதிரகிதநாட்டத்தாலன்மையுமாய்நிற்றலி னிவ்விருவகை

நம்மைத்தார்செல்லாது நானென்னலைச் சிந்திக்குமிடத்து எல்லாமானு கவாப்பூக விளங்குமன்றே? அப்போ தெழுவகைத்தோற்றப் பற்பல ரூப் பெயரால் யாது பலவுளவென்பார்: 'சொல்லாலே பெற்ற மகன் நம்பிப் பிதாப்பேருரைத் தொருவற் குற்றவுடல் வேறுகுமோ' என்றாங் உரைத்த ஒருவற்கு என்பது உரைத்தொருவற் கென்றபடி விகாரத்தா லென்க. ஒருவற் குற்ற வுடல் சொல்லால் வேறாகுமோ வென முடிக்க. எல்லா நானெனலும் அறிவாகத் தெரிசிக்குமிடத்து வெவ்வேறு வீடாமென்க. 'ஐயனைய்லாம லீசனளவுமில்லை' எனப் பாட மோதி யுரைகொள்ளினு மமையும். 'எல்லாருமுரைப்பாராகில்' எனப் படர்க்கைப் பலர்பாலாயிருத்தலின்றமையெனத் திருத்தி யுரைகொள்வ டாம இலையெனப்பாடமோதாரதுஅலரெனப் பாடமோதி யுரைசொல் பூதமையெனக் கொண்டதறுலென்க. இவை தம்முள் வேற்றுமை யென்க. தாஷ்டாந்திர முண்மையால் சலின் றச்ச திருஷ்டாந்தமெனக் கண்டாம். அன்றெனின் சோதனை யாதியாற் காட்டலாம். வலியின் றெனின் மறுத்துரையாமை நன்று. வேறாகுமோ வென்பதில், ஓகா ரம் ஆகாதெனப் பொருடரலால் எதிர்மறை; அந்தர்முகத்தா லொன் றெனவும், பகிர்முகத்தாற் பலவெனவுங் கோடற் கியையுமென்பது கருத்து. (௬)

(அ - கை.)

அல்லவற்றை நானென்றமையாற் களையப்படுபவைகள் இருக்க, எல்லாம் நானெனல் பொருந்துமாவென்ற மாணாக்கனை நோக்கி இக் கவியில் உதாரணமுகத்தா லுத்தரங் கூறுகின்றது.

நாமா யிருந்தோமு நாமேநா மல்லவாய்ப்
போய்மாறு போகும் பொருளுநாம் - யாமத்துத்
தானே புறங்கிச் சகத்துருவாத் தோற்றிவிழித்
தானே யவன்போலத் தான்.

(இ - ரை) "நாமாவிருந்தோமுநாமே நாமல்லவாய்ப் போமவமாகும் பொருளுநாம்" எ-து. சகல விகற்பமுமற்று நாமாக விளங்கு தும் நாமேயாம்; சோதனையாதிகளாற் கழியுமிடத்து நாமல்ல வென்று, வெணப் பேராதற்கியைந்த தத்துவக்கூட்டப் பொருள்களும் நாமேயாம், எங்ஙனமெனின், "யாமத்துத் தானேயுறங்கிச் சகத்துருவாத்தோற்றி விழித்தானேயவன் போலத்தான்" எ-து. இரவில் நடுச்சாமத்தொருவன் சலிப்பறத் தானே நன்குறங்கித் தானே சகத்து வடிவமாகத் தோற்றி விழித்தானெங்ஙனமோ அவனைப்போலத் தீரத்தெளிந்து—எ - று.

அஞ்ஞானகாலத்தில் தத்துவக் கூட்டமாய் நின்றதும் நாமே; ஞானகாலத்து அவற்று ளொன்றுமல்லவாய்ப் பிரகாசித்துக்கொண் டிருந்ததும் யாமே. அஞ்ஞானகாலத்துக் கற்பனைகள் சத்தியமாயும், ஞானகாலத்துச் சங்கற்பரகிதங்கள் சத்தியமாயுமிருத்தலால் 'நாமா விருந்தோமு நாமே, நாமல்லவாய் போமாறு போகும் பொருளுநாம்' என்றார். இஃதநுபவமாதலின் ஒருவனை றுறக்கத்தையும், விழிப்பையு முதாரணமாக வெடுத்துக்காட்டியது பொருந்துமென்க. சகதாரணை தருமமறியாதார் மறுப்பினு மறுப்பர். ஈாமேயென்பதின் தேற்றேகாரத்தை நாமென்பதற்குங் கூட்டுக. சகத்துருவாத்தோற்றல் நித்திரைத் தெளிவின்கண் எவர்க்குமாதலின் இவ்வுவமானந் தகுமெனவறிக. தள்ளப்படுவதும், கொள்ளப்படுவதும் நம்மையன்றி வேறில்லையென்பது கருத்து. (எ)

(அ - கை.)

இங்ஙன மெல்லாமாயும் அல்லவாயும் விளங்கிய வாத்மாவின், சுபாவசொரூபந்தான் யாதோவெனக் கேட்ட மாணாக்கனை நோக்கி இக்கவியி லுத்தரங் கூறுகின்றது.

ஆகமா வாருயிரா வஞ்ஞான மாஞானப்
போகமா வின்பப் பொருளாகி - யேகமாஞ்

நமதே. ரூப மாகியெல்லாச் செய்கையுமா நம்முடைய சொரூப மேதான தால்.

(இ - ரை.) "ஆகமாவாருயிரா வஞ்ஞானமா ஞானப் போகமா யனப்பொருளாகி" எ-து. முத்தனுவுமாகியும், நிறைந்த வுயிராகியும், அஞ்ஞான சொரூபமாகியும், ஞானபோகவடிவாகியும், பேரின்பசொரூப மாகியும், "ஏகமாஞ் சிற்சொரூபமாகி யெல்லாச் செய்கையுமா நம் முடைய தற்சொரூப மேதானதால்" எ-து. யாதோர் விகற்பமுமின்றி விளங்குஞ் சிற்சொரூபமாகியும், சமஸ்த சேஷ்டைகளாகியும் நின்று விளங்குவது வேறன்று, நமதெதார்த்த சொரூபமே யுபாதானமாய் நிற்றலின்—எ - று.

ஆகமென்றதனால் முத்தனுவெனவும், ஆருயிரென்றதனால் பிராணனெனவும், அஞ்ஞான மென்றதனால் மூலப்பிரகிருதி யெனவுங் கொள்க. ஏகமென்பது இருமையுமெனக் காட்ட நின்றது. அதாவது பந்தமும் வீடுமென்க. செய்கையென்றது இருமைக்குமுரிய சேட்டைகளே, யெனக் கொள்க. தானென்றது இருமைக்கு மேதுவாதலின், 'நம்முடைய தற்சொரூப மேதானதால்' என்றார். எனவே, தற்சொ ரூபமென்பது தானே தானாய் விளங்குவதெனப் பெற்றாம். நமதாத்ம ஸ்வரூபமே ஞானமாகவும் அஞ்ஞானமாகவு மிருக்குமென்பதுகருத்து.

(அ - கை.)

இங்ஙனந் தானே தானாய் விளங்கியதோ ரூண்மை நாமத்தை யேனு மோதோவெனக் கேட்ட மாணாக்கனை நோக்கி இக் கவியில் உத்தரங் கூறுகின்றது.

ஆநந்த மென்பா ரதீதமென்பார் நான்மறைக்குந்
தானந்த மாஞ்சர்வ சாட்சியென்பார் - ஞானநூல்
சொன்னகுறி யெல்லாந் தெரிடாத வென்வடிவு
மென்னகுறி சொல்லுவேன் யான்.

(இ - ரை.) "ஆநந்தமென்பா ரதீதமென்பார் நான்மறைக்குந் தானந்தமென்றுஞ் சர்வசாட்சி யென்பார்" எ-து. ஞானானுபவ நிலைகளில் நவநவமாய் அவற்றை யாங்காங்கு நிலைபெற்றோர் தத்தம் நிலையைக் கூறு மாறு யாதெனின், சிலர் ஆநந்தசொரூபமெனக் கூறுவர், சிலர் அதீத வடிவமெனக் கூறுவர், சிலர் இருக்கு முதலிய நான்கு வேதங்களுக் கும் முடிவாய்நின்றுள்ள மகாவாக்கியார்த்தங்கட்குத் தான் சர்வசாட்சி யாய் விளங்கு மென்பர். "ஞானநூல் சொன்னகுறியெல்லாந் தெரிட ராதவென்வடிவுக் கென்னகுறி சொல்லுவேன்யான்" என்று இங்ஙனம் பற்பலவாக ஞானநூல் சொல்லிய குறிகளனைத்தும் மேற்றற் கியையாத எனதெதார்த்தசொரூபத்திற்கு யாது குணங்குறியுடையதெனக் கூறு வன்?—எ - று.

சகுணஞ் சாதித்தல் கற்பனைகளை யகற்றுதற்கன்றி இதுவே சித் தாந்தமன்று. சித்தாந்தமெனின், நிர்க்குணவஸ்துவெனக்கூறுவதெற் றிற்கு? அஃததீதானுபவ நிலையினதாதலி னேலா தென்க. தன்னிடத் திற் சர்வமு நிகழ்தலின், சர்வசாட்சியெனப்பட்டது. அறிவொன்றே பிரதிபாதித்தலின் ஞானநூலென்றார். சகுணங்களையும் நிர்க்குணங் களையும் ஞானநூலனைத்துள்ளுங் காணக; சகுணமென்பன: நித்தியம், பூரணம், ஏகம், பரமார்த்தம், பரப்பிரம முதலியன; நிர்க்குணமென் பன: அசலம், நிரஞ்சனம், அமிர்தம், அப்பிரமேயம், விமலம் முதலி யன. இவற்றைச் சகுணப்பிரமமெனவும், நிர்க்குணப் பிரமமெனவும் அறிஞர் கூறுப. சைதன்னியமானது அந்தந்த அவசரநாமங்களைப் பெறுமென்பது கருத்து. (௧௫)

(அ - கை.)

இங்ஙன மதீதமாயின் விசாரணைக்கிடமின்றி யழிகுதுமேயெனற மாணாக்கனைநோக்கி இக்கவியினுத்தரங் கூறுகின்றது.

நானே வதுவோ வதுநானே நானதுவோ
ஞானோ தயமோநா தாந்தமோ - மோனமோ

சுத்தமோ சூனியமோ தோற்றுஞ் சுபாவநிலை
யித்தனையு மல்லவா மே.

(இ - ரை.) "நானேவதுவோ வதுநானோ நானதுவோ ஞானோதய
மோ நாதாந்தமோ மோனமோ" எ-து. யானெனப்படுவதோ? அது
வெனப்படுவதோ? அதுவே நானெனப்படுவதோ? நானெனலே அது
வெனப்படுவதோ? ஞானோதய மெனப்படுவதோ? வேதமுடிவெனப்
படுவதோ? மௌனநிலை யெனப்படுவதோ? "சுத்தமோ சூனியமோ
தோற்றுஞ்சுபாவநிலை யித்தனையுமல்லவாம்" எ-து. சுத்தநிலையெனப்
படுவதோ? சூனியநிலையெனப்படுவதோ? அனுபவத்திலுதிக்குஞ் சுபாவ
நிலைகள் ஒவ்வோர் பழுதுளதா யிருத்தலின இத்தனையு மெதார்த்த
நிலையல்லனவாம்—எ-று.

ஏ - அசை. நானெனின் எட்டப்படாமையாலும், அதுவெனின்
சொல்மாத்திரமாய் நிற்றலாலும், அது நானெனின் சொல்லலங்கார
மாய் நிற்றலாலும், நானதுவெனின் வரம்பின்றி நிற்றலாலும், ஞா
னோதயமெனின் உதயாத்தமன மின்றெனுஞ் சொல் மாறுதலாலும், நாதா
ந்தமெனின் பிரக்ஞையையன்றி நாதமில்லையென்றற்கு மாறுதலாலும்,
மோனமெனின் வேதரகசியங்கள் வெளிப்பட்டிருப்பதனாலும், சுத்த
மெனின் தன்னையன்றி அசுத்தமிருக்கவேண்டு மாதலாலும், சூனிய
மெனின் தன்னையன்றி நாமரூப மிருக்கவேண்டுமாதலாலும் இத்தனை
யும் அல்லவா மென்றார். எனவே, இத்தனையுமாமெனக் குறிப்பிக்க
நின்றது பேரறும். பெறவே, வஸ்துநிலை சணிக்கப்படாதென்பது கண்
டாம். இக்கவியிலுள்ள ஒன்பது ஓகாரமும் ஐயம். (௧௦)

(அ - கை.)

இங்ஙனம் கூறின் ஆத்மாவையறிபவரும் இலரும்; அந்த ஞானம்
பரிபானின்முழுதாகாதாம்; ஆதலின் அதற்கு ஓர் நாமங் கூறவேண்டும்.
மென்ற மாணாக்கனைநோக்கி இக்கவியி லுத்தரங் கூறுகின்றது.

புத்தோக முத்தோகம் பூரணா னந்தோகஞ்
சத்தோகஞ் சித்தோகஞ் சாந்தோகஞ் - சுத்தோக
மாரணங்க டேடரிய வற்புதோ கஞ்சகல
காரணமாஞ் சைதன்யோ கம்.

(இ-ரை.) "புத்தோகமுத்தோகம் பூரணானந்தோகஞ் சத்தோகஞ் சித்தோகஞ் சாந்தோகம்" எ-து. புத்தோகமும், முத்தோகமும், பூரணானந்தோகமும், சத்தோகமும், சித்தோகமும், சாந்தோகமும், "சுத்தோக மாரணங்க டேடரிய் வற்புதோகஞ் சகல காரணமாஞ் சைதன்யோகம்" எ-து. சுத்தோகமும், வேதங்களாலும் ஆராய்ந்து அறிதற்கரிய அற்புதோகமும், அனைத்திற்கும் உபாதானமாய் நின்றுள்ள சைதன்யோகமும், இவைபோல்பவைகளும் பிரபலசுருதிகளால் நியமிக்கப்பட்டவைகள்—எ-று.

என்றும் புதிதாகக்காண்டலின் புத்தோகமெனவும், சகல கற்பனைகளு முடிந்ததாகக்காண்டலின் முத்தோகமெனவும், அபரிச்சின்னமாய்நிற்றலின் பூரணானந்தோகமெனவும், என்றுமுள்ளதாகக் காண்டலின் சத்தோகமெனவும், தன்னைத்தானே விளக்கி யுணர்வதாகக் காண்டலின் சித்தோகமெனவும், தானே யுபசாந்தநிலையதாகக் காண்டலின் சாந்தோகமெனவும், நின்மலம் இதுபோல்வதின்றாகக் காண்டலின் சுத்தோகமெனவும், நிரேதுவாக அற்புதங்களைத் தரற்பாலது வேறின்மையின் அற்புதோகமெனவும், உபாதான மெனற்கிலைவது இதுபோல்வதொன்றின்மையின் சைதன்யோகமெனவும் பெயர்கள் அமைந்தவாறுகாண்க. இவை சுருதிகளால் நியமித்த நாமங்களென்பதாம். இவையனைத்தும் இடுகுறியால் அமைந்தனவல்ல வாதலின், விசாரணைத்தெளிவாலெனக் கூறவேண்டுமோ? குணமே குணியாகநிற்றலின் விடாத விலக்கணையால் வஸ்துவைக் குறியாமல் குறித்ததென்க. ஆதலின் இந்த நாமங்கள் வேண்டும் என்பது கருத்து. அனுபவம் எய்தாதவிடத்து இந்நாமங்களாற் பயனின்றென்க. (கக)

(அ - கை.)

இந்த நாமங்கள் அநுபவப்பேற்றிற் கியையுமாவென்றும் மாணாக்கனை நோக்கி இக்கவியி னுத்தரங் கூறுகின்றது.

சொல்லாச் சுவானுபவா தீதச் சுகாநந்த
மெல்லாமு நாமா யிருந்தோமே - தொல்லைவினை
யற்றோமெனச்சொலவு மற்றோமே நம்மைநாம்
பெற்றோம் பிழைத்தோம் பிளாய்.

(இ - ரை.) "சொல்லாச் சுவானுபவாதீதச் சுகாநந்தமெல்லாமு நாமாயிருந்தோம்" என்-து. இனையதெனக் கூறற்கரிய சுவானுபவமாயும், அதனைத் தானே யெய்தும் அதீதமாகிய நிரதிசயானந்தமாயும், இந்நிலையையன்றி யனைத்து மின்மையின், சமஸ்தமும் நாமாயும் இருந்து விளங்குகின்றோம்; "தொல்லைவினையற்றோமெனச்சொலவு மற்றோமே, நம்மைநாம் பெற்றோம் பிழைத்தோம் பிளாய்" என்-து. பூர்வ வாசனையாய் நின்றுள்ள சஞ்சிதவினைகளனைத்தையும் ஞானக்கினியா லெரித்து நீன்றனமென்று அனுபவித்துச் சொல்லவுமிறந்தனம்; அதனால் நாமென்கின்ற சொரூபம் யாதோ அதனை ஐயமின்றிப் பெற்றனம், மரணபவங்களைப்பற்றி வரும் பயகம்பனாதிகளினின்று பிழைத்து நின்றனம், மாணாக்கனே—என-று.

ஏ - அசை. சான்றோர்கள் தாங்களனுபவித்த அனுபவப்பேற்றைப் பின்னுள்ளோர் அனுபவிப்பான்வேண்டிக் கூறிய நாமங்கள் யாமும் அனுபவித்தற் கேதுவாய்நிற்றலின் இயையுமென்க. சுகானந்தமென்பது ஒருபொருட் பன்மொழி. பெயரெச்சமாய்நிற்றல் பொருந்தாமையின் எனுஞ்சொலவுமென்னாது எனச்சொலவுமெனத் திருத்தி ப்பொருள்கொண்டாம். மரணபவங்களும், பயகம்பனாதிகளும் ஒழிந்து நிற்றலின் இசையெச்சமென்க. பிள்ளாயென்பது பிளாயென்றாயிற்று. இஃதடக்குறை. இவை அநுபவத்திற்கியையுமென்பது கருத்து. (௩௨)

(அ - கை.)

இவ்வனுபவத்தாலாய பயன் யாதோவெனக்கேட்ட மாணாக்கனை நோக்கி இக்கவியி னுத்தரங் கூறுகின்றது.

சந்ததமு நீங்காத் தனியரசு பெற்றோமே
தொந்தச் சுகாசுகமுஞ் சுட்டோமே - சிந்தனையை
வாட்டியதே சாதி வனவாசம் விட்டோமே
வீட்டிற் குடிபுகுந்தோ மே.

(இ - ரை.) "சந்ததமுநீங்காத் தனியரசுபெற்றோமே, தொந்தச் சுகாசுகமுஞ்சுட்டோமே" எ-து. எப்போதும் அழியாது நின்றுள்ள நிகரற்ற ஞான சிங்காசனத்தை யடைந்தனம்; விடாது மாறிமாறித் தொந்தமா யெய்தற்பாலவாகிய சுக துக்கங்களை யெரித்தனம்; "சிந்தனையை வாட்டிய தேகாதி வனவாசம்விட்டோமே, வீட்டிற் குடிபுகுந்தோமே" எ-து. பந்தத்தால் யாவரது சிந்தனையையும் அல்லவற்றை யானெனதெனக் கற்பித்து வதக்கிக்கொண்டு வருதலை யியல்பாக வுடைய தேகமுதல் மூலப்பிரகிருதி யிறுதியாயுள்ள தத்துவக்குழாங்களாகிய வனவாசத்தினின்றும் அகலப்பெற்றனம். அதனால் இப்போது நிருவாணநிலையதாகிய கூட்டிற் குடிபுகுந்தனம்—எ-து.

ஏகாரங்கள் நான்கும் அசைநிலைகள். பணிக்குப் பொன்னும், கடத்திற்கு மண்ணும், படத்திற்கு நூலும் ஆகிய இவைகள் தத்தங் கற்பனைகளில் நான்கு காலத்தினு மிருக்குமாறுபோன்று சைதன்யம் இருத்தலின் அதனை 'தனி யரசு பெற்றோம்' எனவும், அதனை மறத்தலா லெய்துவனவாதலின், 'தொந்தச் சுகாசுகங்கள் சுட்டோம்' எனவும், கற்பனைகளை மெய்யெனக்கருதிவாழும் வாச மிப்போதகன்றிருத்தலின் 'சிந்தனையைவாட்டிய தேகாதி வனவாசம் விட்டோம்' எனவும், வனவாசத்திற் கெதிர்மறை வீடாதலால் 'வீட்டிற் குடிபுகுந்தோம்', எனவுங் கூறியவாறுகாண்க. தேகாதிப்பிரபஞ்சங்களை வனவாச

மெனலானும், விட்டோமெனலானுஞ் சர்வமு மித்தையெனக் காணப்பட்டதென்க. அயலின்மையின் இங்கே வீடென்றது சிதாகாசமெனக்கொள்க. முத்திபுலகிற் கரசனாதலென்பது கருத்து. (கக)

(அ - கை.)

இவ்வரசன் தன்னரங்கில் எந்த விநோதத்தரிசனமா யிருப்பானென்ற மாணாக்கனைநோக்கி யிக்கவியில் உத்தரங் கூறுகின்றது.

நனவிற் றசேந்திரிய நாட்டியங்கள் பார்ப்போங்
கனவின் மனக்கூத்துங் காண்போ - நினைவில்
சுழுத்தியிலே யில்லாத சூனியக்கூத் தாடி
விழுப்பொருளா நாமிருப்போ மே.

(இ - ரை.) "நனவிற் றசேந்திரிய நாட்டியங்கள் பார்ப்போம்" எ-து. அனுதினமுஞ் சாக்கிரத்திற் கிரியையங்கள் தூலமாகக் காணுமிடத்து ஞானேந்திரியம் கன்மேந்திரியமாகிய பத்தும் இயங்குவனவாகிய நாட்டியங்களைப் பார்த்துக்கொண்டிருப்போம்; "கனவின் மனக்கூத்துங்காண்போம்" எ-து. சொப்பனத்திற் கிரிசியங்கள் சாயையாகக் காணுமிடத்து அப்போது அங்கேநின் றியங்கிநிற்பதாகிய மனக்கூத்தையுங் கண்டுகொண்டிருப்போம்; "நினைவில் சுழுத்தியிலே யில்லாத சூனியக்கூத்தாடி விழுப்பொருளா நாமிருப்போம்" எ-து. அந்த மனமென்பது கிஞ்சித்துமில்லாத சுழுத்தியின்கண் தனக்கெனச் சொரூபமொன்றில்லாத சூனியமாய் நின்றியங்குவதாகிய நடனத்தை மிக்க விருப்பத்தோடாடி மேலாயபொருளாயும், எவற்றிற்குஞ் சாட்சியாயும் நாமெப்போது மிருப்போம்—எ-று.

ஏ - அசை. நினைவில் என்பது வினைத்தொகையாதலின் திரியத்தென்க. கிரியைத்தின்றன்மை இம்மூன்றுவிதமாய்நிற்றலின் ஆங்காங்கிலையுந்தவாறு நடித்தலும், தனது புடைபெயர்ச்சியேனும் காணாதொளித்தலும் அஞ்ஞான நிலையெனவும், இங்ஙனமாயவையெல்லாம்

யாதெனவுன்னியவிடத்து அறிவாகக் காண்டலின் 'விழுப்பொருளா நாமிருப்போ'மென்றது ஞானநிலையெனவுங் குறிக்கநின்றதுமுகாண்க. இங்ஙனமாய விநோததரிசனமா யிருப்பமெனன்பது கருத்து. (௧௪)

(அ - கை.)

இங்ஙனமாய விநோததரிசனத்திற் சுகதுச்சங்க ளெய்தற்பாலவா மே; அப்போ திர்தச் சாக்ஷாத்காரப் பிரத்யக்ஷானுபவநிலையாங்ஙனே யென்ற மாணாக்கனை நோக்கி யுத்தரம் இக்கவியிற் கூறுகின்றது.

நானெனன் றிருந்தவனா னான்கண்டே னாகிலவ
னானெனன் றருத்தரிக்க வொட்டேனே - ஞான
வடிவான நானேநான் மற்றுளநா னெல்லாம்
படிவா னிறந்துபிறப் பான்.

(இ - ரை.) "நானெனன் றிருந்தவனா, நான்கண்டேனாகி லவ னானெனன் றருத்தரிக்க வொட்டேனே" எ - து. எங்ஙனுஞ் சோபா திகத்தையேனும் நிருபாதிகத்தையேனும் நானெனன் றபிமானித்திருந் தவனெவன், அவனை யுள்ளவாறு யான் காண்பேனாயின், அப்படிப் பட்ட புருடன் மாமிச வடிவாகாரமாதற்குச் சற்றும் உடன்படேன்; "ஞான வடிவான நானே நான், மற்றுளநானெல்லாம் படிவா னிறந்து பிறப்பான்" எ - து. இப்போது கண்டவிடத்தில் ஞானவடிவாக விளங்குவது எந்த நானோ, அந்த நானே நானெனப்படுவதாம்; அத ற்கு அயலாகின்றுள்ளவற்றை நானெனப் படுவதெல்லாம் வடிவமெடு த்தெடுத்துப் பிறந்திறப்பான் வேண்டியாம்—எ - று.

நான்கண்டேனாகிலென்றதனால், அறிவென வறிந்தத் தரிசனயின் மையின் பரோட்சஞானமெனவும், ஞான வடிவான நானேநானென்ற தனால் தரிசனமானமையின் அபரோட்ச ஞானமெனவுங் கொள்ளக் கிடந்தமை காண்க. எனவே, ஞானதரிசனமாகிய விடத்துச் ஜனன மரணமின்மையும், ஆகாதவிடத் துண்மையுமெனக் கொள்க. ஞான

லாதவை நானென்றிருந்தபோதும் எதார்த்த நானேயன்றி யின்மை யின் ஆப்போது முண்டென்பது கருத்து. (கரு)

(அ - கை.)

நிர்விகாரியான இவ்வாத்மா விவகரிக்கிற் பந்தப்படாதோவென்ற மாணாக்கனைநோக்கி யுத்தரம் இக்கவியிற் கூறுகின்றது.

சாயையென வாழ்குடும்பந் தன்னைச் சுமந்தாலு
மாயையெனு மேக மறைத்தாலுந் - தூயவொளி
தானு விளங்கிச் சகசாட்சி யாவிருக்கு
ஞானுதித் தன்றானே நாம்.

(இ - ரை.) "சாயையென வாழ்குடும்பந் தன்னைச் சுமந்தாலு மாயையெனு மேகமறைத்தாலும்" எ-து. சாயாவடிவ மெங்ஙனமோ, அதுபோன்று வாழ்கின்ற குடும்ப பாரத்தைத் தாங்கிச் சுமந்து நின்றாலும், தனது பிராந்தியாகிய மாயை யென்னும் மேகந் தன்னை மறைத்தாலும் "தூயவொளி தானுவிளங்கிச் சகசாட்சியா விருக்கு ஞானுதித்தன்றானே நாம்" எ-து. நின்மல ரூபமாகிய சுவயம் பிரகாசமே தனதெதார்த்த வடிவமாக விளங்கித் திரிசிய ரூபமாகிய சகத்திற்குச் சாட்சியாகவிருக்கும் ஞான சூரியனே நாமென வறிக— எ - று.

மெய்போலக்காண்டலின் குடும்பத்தைச்சாயையெனவும், தனது பிராந்தி நிருவாண நிலைக்கண் இன்றி யழிதலின் மாயையை மேக மென்றும், யாதொன்றாலும் மறைவுபடாது என்றும் சதோதயமாய் விளங்கலின் ஆன்மாவை ஞானுதித்தனெனவுங் கூறியதைக் குருமுன் னிலையில் சுகானுபவத்தாற் காணலாமென்க. பகிர்முகத்தாலும் அந்தர்முகத்தாலும் பந்தப்பட்டதுபோலவும், விட்டதுபோலவும் காண்டலேயன்றி ஆன்மாவுக் கில்லையென வறிக. சுவயம் பிரகாசம் வேறென்பாரை மறுத்து ஆன்மாவேயெனக் கூறியதென்க. ஆன்மா ஆதி மத்தியாந்த ரகிதமா விளங்கலின் அங்காட்ட மகலாவிடத்துப் பந்தப்படாதென்பது கருத்து. (கசு)

(அ - கை.)

ஆத்திரத்தனைப்போல இவன் தொழிற்படாட விருக்கவில்லையே யென்ற மாணுக்கனை நோக்கி யுத்தரம் இக்கவியிற் கூறுகின்றது.

ஏதேது வந்தாலு மேதேது செய்தாலு
மேதேதி லின்புற் றிருந்தாலு - மேதேதுந்
தாஞகா வண்ணந் தனியே தெரிந்திருக்கு
ஞாஞகா ரந்தானே நாம்.

(இ - ரை.) "ஏதேதுவந்தாலு மேதேதுசெய்தாலு மேதேதி லின்புற்றிருந்தாலும்" எ - து. எந்தெந்தக் கதி வந்தடைந்தாலும், நற்கருமம் துர்க்கருமம் மிசிரகருமமென்பவற்றுள் யாது யாது செய்தாலும், எந்தெந்தப் பதவிகளிற் சுகித்திருந்தாலும், "ஏதேதுந் தாஞகாவண்ணந் தனியேதெரிந்திருக்கு ஞாஞகாரந்தானே நாம்" எ - து. இவற்றுள் யாதொன்றாகவேனும் ஆகாரப்படாமல் அவை சலட்சணமாயும், தான் விலட்சணமாயும் நின்று தனியே தெரிந்து ஞாஞகாரமாய் நிற்றலால் நாமே ஞாஞகாரவடிவாம்—எ - று.

பிறவி முதலியவைகள் யாவும் நிலையின்மையின், ஏது ஏது என்கின்ற அடுக்குகள் நான்கும் ஐயம். இதனைக் காணவேண்டின் இந்தப் பிறவியிற்றுனே மூன்றவத்தையினும் தூலமாயும் சாயையாயும் பாழாயும இவை யல்லவாயும் நா மிருப்பதே சாட்சியாமெனக. தொழிற்படுவதுபோற் காண்டலேயன்றி உற்றுணருமிடத்துத் தனக்கில்லையெனக. தொழிற்பாடனும் ஆதாரநாட்டம் அகலாமையின்பட்டதுபோற்காண்பனென்பது கருத்து. (கஎ)

(அ - கை)

ஆத்மா அசைப்பிக்கச் சகலமும் அசைதலின் அதற்குப் பந்தம் உளதேயென்ற மாணுக்கனை நோக்கி இக்கவியிலுத்தரங் கூறுகின்றது.

ஆட்டிவிட்ட பம்பரம்போ லாசைமுத லிக்கரணங்
கூட்டி முடித்தாலுங் கூடோமே - சாட்டியதிற்
சம்பந்த மற்றோமே தற்சொருப மானோமே
யெம்பந்தம் போனவா றே.

(இ-ரை.) "ஆட்டிவிட்ட பம்பரம்போ லாசைமுத லிக்கரணங் கூட்டி முடித்தாலுங் கூடோமே" எ - து. தானுட வகையறியாது ஒருவனுட்ட அதனு லாடும் பம்பர மெங்ஙனமோ, அதுபோல ஆசை முதலிய அகக்கரண புறக்கரணங்களாகிற இவைகளைக்கொண்டு இன்ப த்துன்பங்களை யூழாற்கூட்டி முடிக்கினுஞ் சம்பந்தப்படுவ தில்லை; "சாட்டியதிற் சம்பந்தமற்றோமே, தற்சொருபமானோமே, யெம்பந்தம் போனவாறே" எ - து. அப்பம்பரத்தை யாட்டிய கயிற்றைப்போல உற்றுநின்று தம்மை யுணருமிடத்துச் சகலபந்தசம்பந்தமு மற்று நின்றனம்; தானுகின்ற சுவயம்பிரகாச வடிவ மாயினும்; அப்போது எமது பந்தம் போனவாறெங்ஙனமோ யாமறிகிலம்—எ-று.

நம்மா லெய்தியது ஊழாதலால், ஊழின்மேலேற்றிக் கூறினும் மயது புடைபெயர்ச்சியேயென்க. நம்மை நாம் ஆயாவிடத்து எவ் வகைப் புடைபெயர்ச்சியும் அயலினதாகக்காணும்; காணினும் அறி வார்க் கயலன்று; அன்னியங் காணுமையினென்க. என்னை? "நன் னிலைக்கட் டன்னை நிறுப்பானுந் தன்னை, நிலைகலக்கிக் கீழ்டுவானு நிலையினு மேன்மேலுயர்த்தி நிறுப்பானுந் தன்னைத், தலையாகச் செய் வானுந் தான்" என்றார் நற்கண்டார். ஆன்மா விலட்சணமாயிருத்த லின் தனக்குப் பந்தமின்றென்பது கருத்து. (கஎ)

(அ - கை.)

ஊழின் அஞ்ஞானம் நீங்கி ஞானம் வந்தவழி யாதெனக்கேட்ட மாணுக்கனை நோக்கி இக்கவியி லுத்தரங் கூறுகின்றது.

அஞ்ஞான மெத்தா லழிந்ததோ ராயும்
விஞ்ஞான மெத்தால் விளைந்ததோ - மெய்ஞ்ஞானச்
செம்மையனு பூதித் தெளிவுபெற்ற தெங்ஙனேனே
வெம்மையல்லா லேதுகண்டோம் யாம்.

(இ - ரை.) "அஞ்ஞான மெத்தாலழிந்ததோவாராயும் விஞ்ஞான மெத்தால் விளைந்ததோ" எ - து. அஞ்ஞான மெனப்படுவதீ யாதினு லழிவுற்றதோ? தன்னைத்தா னாராய்தற்கிசைந்த மெய்ஞ்ஞானமென ப்படுவது யாதினால் விளைவுற்றதோ? "மெய்ஞ்ஞானச் செம்மையனு பூதித் தெளிவுபெற்றதெங்ஙனே, வெம்மையல்லா லேதுகண்டோம் யாம்" எ - து. அந்த மெய்யுணர்வால் எய்தும் ஐயந்திரிபில்லாத சுவானு பூதி மேல் மேலோப்பின்றித் தெளிவுபெற நின்றது யாதென் றோலோ வெனின், எம்மையன்றி யுபாதானமாக யாமேதுங் கண்டிலம் —எ - று.

தன்று மருளழிந்ததும், மெய்ஞ்ஞானம் விளைந்ததும், சுவானு பூதித் தெளிவுபெற்றதும் நம்மையன்றி ஆதார வாதேயமும், உபா தான வுபாதேயமும், நிர்விகாரவிகாரமும், அதிஷ்டானவாரோபமும் இன்மையின் நாமேயெனக் கண்டனம்; தனது சுவானுபவத்தில் வந்த தும் போனது மில்லையென்பது கருத்து. மூன்று ஓகாரமும் ஐயம். தன்மை யொருமை யெங்ஙனமோ அங்ஙனமே தன்மைப் பன்மையும் மருளின்கண்ணும், தெருளின்கண்ணுமாதலின் எம்மையல்லால் ஏது கண்டோம் யாம் என்றார். தம் நிலைகளில் நில்லாதார்க்கு இஃதெங் ஙன முடன்படாம்? இவர்கள் மறுமைக்கோட்டுக்; மானிட மிருகம் போல்பவராதலின். (உசு)

(அ - கை.)

ஞானம் வருதலும் அஞ்ஞானம் போதலும் தெரியாவிடின் அறிவு மென்னபதெங்ஙனங்கூடும்? அதற்கோ ருளவுகூறவேண்டும் என்ற மாணுக்கனை நோக்கி யுத்தரம் இக்கவியிற் கூறுகின்றது.

மெய்யெல்லா நாமா விளங்கியபின் னுமாய
பொய்யெல்லா மெங்கேனும் போயவோ - மெய்பொய்
யிருவகைக்கு நாமே யிடமானோந் தொந்தித்
திருவகைக்கு மெட்டாம லே.

(இ - ரை.) "மெய்யெல்லா நாமா விளங்கியபின் னுமாய பொய்யெல்லா மெங்கேனும் போயவோ" எ - து. மெய்யெனப் படுபவை யெவையோ, அவையனைத்தும் யாமாக விளங்கியபின்னர், முன்னர் யாமாக நின்ற கற்பனைகளாகிய பொய்யனைத்தும் எங்ஙனஞ் சென்றனவோ? "மெய்பொய் யிருவகைக்கு நாமே யிடமானோந் தொந்தித் திருவகைக்கு மெட்டாமல்" எ - து. கற்பனாரகிதம் சற்பனாசகிதமென்கின்ற இருவகைப் பாகுபாட்டிற்கும் யாமே ஆதாரமாக நின்றோம்; மேற்கூறிய மெய் பொய் என்னும் இருவகைக்கு முடன்படாமல் - எ - று.

ஏ - அசை. பகிர்முககாட்டத்தில் தூலமுதன் மூலப்பிரகிருதி யிறுதியாய்க் கிடந்த தத்துவக்குழாங்கள் அனைத்துங் கற்பித சகிதங்களாகவும், அந்தர்முகத்தில் அவையனைத்தும் ரகிதங்களாகவும் நின்றமையான், மெய்பொய் என்றது 'மெய்யெல்லாம் பொய்யெல்லாம்' என்றார். பழுதையிற் பாம்புவந்ததும் போனதுஞ் சொல்மாத்திரமே யன்றிப் பொருளின்மைபோல நமது எதார்த்த வடிவிற் கற்பனை வந்ததும் போனதுமென்பது சொன்மாத்திரமே யன்றிப் பொருளில்லாமையைக் கண்டே இங்ஙனங் கூறினாரென்க. மெய் பொய் இருந்தாலன்றோ அவற்றிற்கு யாம் ஆதார மென்னலாம்? இல்லாவிடத்து ஆதாரமென்பது எங்ஙனங் கூடுமென்பார் 'இருவகைக்கும் எட்டாமல்' என்றார். திரைமுடிபோல் நிற்றலின் அறிஞனெனப்படுவனென்பது கருத்து. விகற்பத்தில் நிர்விகற்பமும், நிர்விகற்பத்தில் விகற்பமும் இல்லையேனும் அதற்கு மயமாய்நின்ற யாம் இன்றோ? இதனைக் குறிப்பால் தெரிவித்தாரென்க. (௨0)

(அ - கை.)

முன் தேகி நானெனவும், தேகம் நானன்றெனவுங்கூறி, இப்போது தேகத்திற்கு வேறுபட்டும் படாமலும் இருப்பானெனக்கூறின், உண்மைதான் யாதோவென்ற மாணாக்கனை நோக்கி, உவமான பூர்வகமாக இக்கவியிலுத்தரங் கூறுகின்றது.

தேகிநா மென்றேமே செல்வநம தென்றேமே
போகிநா மென்றேமே பொய்யன்றே - யாகமுதல்
நாமா விருந்ததுமெய் நாமசங்க மானதுமெய்
தேமாவித் தேபோற் றினம்.

(இ - ரை.) "தேகிநா மென்றேமே செல்வநம தென்றேமே போகிநாமென்றேமே பொய்யன்றே" எ - து. தேகமாகிய உபாதித்ரயம் நாமலல, அவற்றை இயக்குங் கர்த்தத்துவமும் அவற்றை யுணருஞ் சேதனத்துவமு முடையது ஆன்மாவாதலின், அதுபற்றி முன்னோர் தேகி நாமெனக் கூறியதும், அதுகாரணமாக வெய்திய போகோப ச் செல்வம் நமதெனக் கூறியதும், போகங்களனைத்தையும் அங்கங்கே நின்று நுகர்பவன் ஆன்மாவாதலின் அதுபற்றிப் போகி நாமெனக்கூறியதும் பொய்யல்லவே ; "ஆகமுதல் நாமாவிருந்ததுமெய் நாமசங்கமானது மெய் தேமாவித்தேபோல் தினம்" எ-து. தூலதனுமுதல் பிரகிருதிவரையும் நாம் அதுவாக அந்தந்த அவசரத்தில் இருந்ததும் மெய், இருந்துங் கலப்பற்று யாமிருந்ததுவும் மெய், இனிய மாங்கனியின்வித்து எங்ஙனமோ அதுபோல எப்போதும்—எ-று.

சிற்பிரகாசத்தையன்றித் தேகிவேறெனின், யாவும் அயலாகமுடியும்; முடிவதால யாவும் நாமாகமுடியாது; முடியாததால் இவ்வமைய் பொருந்துமென்க. அறிவறியாமையோடுகூடியுங், கூடாமலுமிருத்தலே உண்மைநிலையாமென்பதுகருத்து. இக்கவியிலுள்ள நான்கு ஏகாரமும் அசைநிலைகள். (உக)

(அ - கை.)

இப்படிப் பற்றிவும் பற்றுதமிருததல் அஞ்ஞானதிசையின்மாத்திர
மா ஞானதிசையிலுமோவென்ற மாணாக்கனை நோக்கி இக்கவியில்
உத்தரங் கூறுகின்றது.

வாலமதி யூகமதி போன்ஞான வஞ்ஞானக
காலமுநாங் கண்டு கழித்தோமே - சீலமா
மப்போது நம்மிலே யாரோப மானவெலா
மிப்போது பொய்யான வே.

(இ - ரை.) "வாலமதி யூகமதிபோல் ஞான வஞ்ஞானக் காலமு
நாங்கண்டு கழித்தோம்" எ-து. உலகவிவகாரந் தெரியாத காலமதி
வாலமதியெனவும், தெரிந்தமதி யூகமதியெனவும் இரண்டாம்; இது
போல விஸ்மரணைகாலத்தையும் சுஸ்மரணைகாலத்தையும் உள்ளவாறு
கண்டனுபவித்துக் கழித்தோம், "சீலமாமப்போது நம்மிலேயாரோப
மானவெலா மிப்போது பொய்யானவே" எ-து. சீலமாகிய அவ்விர
ண்டுபருவத்தும் நம்மில் ஆரோபமாகக் காணப்பட்ட (ஒன்றிலொன்று)
அனைத்தும் இப்போது கற்பிதமாகவே முடிந்தன — எ-று.

மதி இவ்விரண்டு பருவமுமாகியும் ஆகாததுபோலத் திரஞானம்
இவ்விரண்டு பருவமுமாகியும் ஆகாததுமாய் நிற்றலின் இவ்வுவமை
பொருந்தும். அது பண்பு, தொழில், பயன், என்னும் சாதாரண தரும
விளக்கணத்தானென்க. என்னை? "பண்புந் தொழிலும் பயனுமென்
றிவற்றின், ஒன்றும் பலவும் பொருளொடு பொருள்புணர்த்தொப்பு
மைதோன்றச் செப்புவதுவமை" என்பதிலக்கணமாதலின். இக்கவியி
லுள்ள மூன்று ஏகாரமும் அசைநிலைகள். களங்கரகிதமாக விளங்கும்
பருவநோக்கிச் சீலமா மப்போறென்றார். சீலமாவெனப் பாடமோதி
வினையெச்சமாக்கின் ஆரோபமாதலாகின்றபகுதிவினைகொண்டுமுடிய
வேண்டும். முடியின் சீலத்திற்கும், ஆரோபத்திற்கும் பொருத்தம்

அமையாது. அதுபற்றிச்சிலத்தை யப்போதென்கின்ற காலப்பெயருக்குப்பண் பாக்கினும். ஆதலின் இதுவழுவன்று, இவ்விருதிசையினுமெண்பது கருத்து. (உஉ)

(அ - கை.)

இவ்வனுபவம் வருவதற்கு முன்னருள்ள அஞ்ஞான திசையிற் சனனமரணங்களுளவோவென்றமாணாக்கனைநோக்கி இக்கவியி லுத்தரங் கூறுகின்றது.

பொய்தானே யின்பப் பொருளாப் பரம்பரையின்
மெய்யாச் சுகம்போல் விளைந்தக்கா - லையோநா
மெங்கே பிறந்தோ மெதைத்தெய்வ மாத்தொழுதோ
மெங்கே யடைந்தோமோ யாம்.

(இ - ரை. "பொய்தானே யின்பப் பொருளாப் பரம்பரையின் மெய்யாச்சுகம்போல் விளைந்தக்கால்" எ-து. பொய்யாகிய தேகாதிப் பிரபஞ்சங்களே நித்திய சுகம்போற்காணப்பட்டு அதற்கியைந்தபொருளாகித் தொன்றுதொட்டுப் பரம்பரையாக எவர்க்கு முண்மையாகத் தனது நிரதிசயானந்தம்போல விளங்கிக்கொண்டுவருமாயின், "ஐயோநா மெங்கேபிறந்தோ மெதைத்தெய்வமாத்தொழுதோ மெங்கேயடைந்தோமோ யாம்" எ-து. ஐயையோ, தொன்றுதொட்டு இதுபோல நங்கெங்கே பிறந்தோமோ? எவ்வெவற்றைத் தெய்வமாகத் தொழுதோமோ? இங்ஙனமாக வாகா்து முடிவில் யாதிடத்தை யடைந்தோமோ யாம் —எ-று.

பொய்யாகிய மாயாகாரியத்தைப் பொய்யென்றது காரணவாகு பெயர். பொய் மெய்யாகச் சகம்போற் காணப்படுவதும் இன்பப்பொருளாக நிற்பதும், மூலடிமைந்தனுக்குக் கர்த்தத்துவமுஞ் சேதனத்துவமுந் தந்து கதைகட்டினாற்போலுமாதலின், போலென்னும் உவமவுருபை விரித்தார். ஐயோ என்பது இரக்கக்குறிப்பு. யாமெனல் ஏகதிஷ்

டான சைதன்யமாதலின் பிறந்ததுமில்லை, இறந்ததுமில்லை, தொழுதது மில்லை, அடைந்ததுமில்லை என்பதைக்குறிப்பிக்க, எங்கேயென விரண்டு இடத்துங் கூறினர். மெய்தானே யென்பதில் ஏகாரந் தேற்றம். மெய்தானே யென்றதது அசத்து, சடம், துக்கமென்னும் இலக்கணத்ததை இயல்பாக ஏற்றல்பற்றியென்க. சகத்து சத்தெனின் சித்து வேறாகாதிருக்கவேண்டும்; அங்ஙனமின்றே. சத்தே சித்தெனக்கூடுமோ? அசத்தே சடமெனக்கூடும். ஆகவே, இன்பமெனல் எங்ஙனங்கூடும்? துக்கமெனவேபெறுந்தும். இன்பமென அனுபவிப்பானேனெனின் பொருளைப் பொருளாகக் காணத் தெரியாததால் இன்பத்தை யின்பமாக அனுபவிக்க எங்ஙனங் கூடும்? இன்பமென நுகர்தல் மூடமேயென்க. ஆத்ம சைதன்யத்திற்கு ஆதிமத்தியாந்தமின்மையின், அறிவே வடிவாகிய நமக்குஞ் சனனமரண மின்றென்பது கருத்து. போலியைப் பொருளாகக்கோடல் மூடம். இன்றல்ல வென்பதைக் காட்டப் பரம்பரையென்றார். பொருளல்லவற்றைப் பொருளாகக் கோடலும், சுகமல்லவற்றைச் சுகமாகக் கோடலும் நம்மா லன்று; நமக்குத் தந்தைக்குத் தந்தையும், அவர் தந்தைக்குத் தந்தையும், அவர் தந்தைக்குத் தந்தையும் விடாது செல்லுதலையும், நமக்கு இங்ஙனம் போதிக்க எழுந்தருளிய குருவுக்குக் குருவும், அவர் குருவுக்குக் குருவும், அவர் குருவுக்குக் குருவும் விடாது செல்லுதலையும் இயல்பாக வென்றுமுடைமையின் இதுபற்றிப் பரம்பரையெனினும் அமையும் என்க. (௨௯)

(அ - கை.)

இவ் வனுபவம் உதிப்பதற்குமுன் ஆத்மா எப்படி யிருந்ததோ வென்ற மாணுக்கற்கு இக்கவியினுத்தரங் கூறுகின்றது.

ஆராகி யோவிருந்தோ மார்க்கோவீ ணுக்குழந்தோம்
பேரா யிரமாகப் பேசித்தோம் - ஆரையினி
நம்மாலே தேடரிய நம்மைநாங் கண்டோமே
யம்மா பிழைத்தோ மடா.

(இ-ரை.) "ஆராகியோவிருந்தோ மார்க்கோவீணுக்குழைந்தோம் பேராயிரமாகப் பேதித்தோம்" என்-து. பிரகிருதிமுதலிதுகாறு மெழுமைத் தோற்றத்துள் யாராகியிருந்தோமோ? யார்க்கு வீணுக்கு உழைந்தோமோ? பிறவிகடோறுங் கணக்கில்லாத நாமங்கள் யாதுயாது பெற்றோமோ அறியேம், "பூங்கரியினி நம்மாலேதேடரிய நம்மைநாங் கண்டோமே, யம்மா பிழைத்தோமடா" எ-து. பரிபூரணமாய் நின்றுள்ள நிலையில் முன்னர் நம்மாலே தேடற்கரிய நம்மை யிப்போது கண்டோமே. ஆ! ஆ!! பிறவிக்கடலில் அகப்படாமல்பிழைத்தோம்! சற்புத்திரனே!—எ-று.

இக்கவியிலுள்ள இரண்டு ஓகாரமும் நிச்சயப் பொருளைத் தராததால் ஐயம். இச்சன்மம் அயலையோ தன்னையோ யானென்னற்கிசைவது? தன்னையெனின், உடல்தானுருமா? அயலையெனின், பிறவி தோறுமா? இப்பிறவியில்தானோ? பழக்கத்தா லெய்தியதாதலின் பிறவிதோறுமெனின் இப்பிறவி யாமாகுதுமா? ஆகாதெனின், எப்பிறவி யாமாகுது மென்பார், 'ஆராகியோ விருந்தோமெனவும், இப்பிறவியே பொய்யாகும்போது இவ்வுடல் மெய்யாகுமா? இதனை அபிமானித்தலும், உபசரித்தலும், பொருள்தேடிப் பாதுகாத்தலும், இதனைச் சார்ந்த உயிர்ச் சார்புகளைப் பேணிக் காப்பான்வேண்டிப் பல வாறுகவருந்தி முயன்று பாடுபட்டுழைத்தலும் அவலமோ? பயனோ? பயனெனின், முன்னர்ப் பிறவிதோறும் இவவாறாக முயன்ற முயற்சிகள் இப்போது பயன்தரவேண்டுமே; இல்லையெனின், இதுவும் பின்னரவைபோல்வனவாக முடியு மன்றோ? ஆதலின் ஆர்க்கோ வீணுக்குழைத்தோமெனவும், பொய்யாகிய இப்பிறவிக்கு எந்த நாமமும் பொய்யோ? மெய்யோ? மெய்யெனின், முன்னர்ப் பிறவிகடோறும் எமக்கெய்திய பெயர்கள் இப்போது எமக்கு மெய்யாக வேண்டுமே; பொய்யெனின், இதற்கெய்திய பெயரும் இனிப் பிறவிகடோறும் பொய்யாதற்கிசையுமன்றோ? ஆதலின் 'பேராயிரமாகப் பேதித்தோம்' எனவும், முன்போற் பகிர்முகத்ததாகாது, இப்போது யாம் அந்தர்

முகத்தாதலின், 'பூரையினி நம்மாலே தேடரிய நம்மை நாங் கண் டாமே, அம்மா பிழைத்தோமடா' எனவுங் கூறினார். பகிர்முக மெனலும், அந்தர்முக மெனலும், முறையே உலகை யயலாகப் பார்த்தலும், அறிவாகப் பார்த்தலுமே யென்க. வறியோனுக்குச் செல்வம் வந்துழிப் பசிநோய், காதனோய் என்பவற்றினின்று பிழைத்தோமென அவன் களிப்பதுபோன்று, பிறப் பிறப்பாகிய நோய்களினின்று நீங்குமியான் ஞானச்செல்வ மெய்துழி, 'அம்மா பிழைத்தோமடா' எனக் கூறுவானன்றோ? ஆதலின் இஃதேற்றற்பாற்றோ? தள்ளற் பாற்றோ? தள்ளற்பாற்றெனின், இஃதுந் தள்ளற்பாறாகவேண்டும்; அன்றெனின் இஃதும் அன்றாக முடியும். இதனைச் சுருக்கி யுரைத்தாம்; விரிக்கிற்பெருகுமாதல் பற்றியென்க. அப்போதும் பரிபூரணமாயிருந்ததென்பது கருத்து. (உ௪)

(அ - ரை.)

தம்மைத் தரிசிக்கிற் பெறுவதும் உறுவதும் யாதோ வென்ற மாணாக்கனை நோக்கி இக்கவியி லுத்தரங் கூறுகின்றது.

கள்ள மனத்தைக் கரைந்துருகப் பெற்றோமே
யுள்ளபடி நம்மை யுணர்ந்தோமே - தெள்ளமுதச்
சச்சிதா நந்தமுநாந் தாமா யிருந்தோமே
யச்செல்லா நாமாகை யால்.

(இ-ரை.) "கள்ளமனத்தைக் கரைந்துருகப் பெற்றோமே யுள்ளபடி நம்மை யுணர்ந்தோமே" எ-து. கள்ளத்தனமாக நின்றுள்ள எமது மனத்தை ஞானக்கினியாற் கரைந்துருகும்படி நமது வயமாக்கினோம்; இனித் தடையின்மையின் உள்ளவாறு நமதெதார்த்த நிலையைப் பெற்றோம்; "தெள்ளமுதச் சச்சிதானந்தமு நாந்தாமா யிருந்தோமே யச் செல்லா நாமாகையால்" எ-து. முன் அநிர்த சட துக்கமாக நின்ற

வாறு போன்று இப்போது தெளிவாகிய அமிர்தம்போன்ற சச்சிதாநந்த வடிவமாகவு மிருந்தோமே; சகல வுயிர்களும் நாமாயிருந்தனேம்—எ - று.

முன் பழக்கவாசனையினால் அல்லவற்றை ஆண் பெண்ணெனக் கருதித் தனது பிரதிபிம்பமென அறியாமலும் நிதானியாமலும் சேறலே இன்னும் இயல்பாக வுடைமையின் 'கள்ள மனம்' எனவும், உட்டணத்தாலன்றி அரக்கு முதலியவை கரைதலும் உருகுதலும் எங்ஙனமேலாதோ, அதுபோல ஞானாக்கினியாலன்றி அயலாகத் தடித்த மனம் கரைதலும் உருகுதலுமேலாமையின் 'கரைந்துருகப்பெற்றோம்' எனவும், அங்ஙனம் அது கரையாவிடத்தும் நம்மை நாம் சிதாகாயமாகக் காண்டலை கூடாமையின் 'உள்ளபடி நம்மை யுணர்ந்தோம்' எனவும், சிதாகாய மாகாவிடத்துக் கூறற்கியையாத விலக்கணங்களை இப்போ தேற்றலின் 'சச்சிதாநந்தமு நாந்தாமா விருந்தோம்' எனவும், விகாசித்து நிற்கினும் உயிர்கள் வேறில்லாமையான் சச்சிதாநந்த வடிவமாதலின், 'அச்செல்லா நாமாகையால' எனவுங் கூறியவாறு காண்க. கள்ள மனத்தைக் கரைத்துருகப் பெற்றோமே யெனப் பாடமோதி யுரைகூறப் பொருந்துமேனுங் கரைத்தென்பதுபோல வுருக்க வெனப் பிறவினை யாக்காமையால் வழுவெய்துமெனக் கருதி இங்ஙனந் திருத்தி யுரை கூறினும். உள்ளபடி யென்ற மிகையால் சிதாகாயத்தை வருவித்தாம். சொல்லாலன்றிப் பொருளாற் பகுத்து ஏகமாக்குதல் எவர்க்கு மரிதரிதாதலின் அது கருதித் தெள்ளரிய சச்சிதாநந்தமெனப் பாட மோதி யுரைகூறினு மமையும். தெள்ளிய மனமென்ப திருப்பது பற்றிக் கள்ளமன மென்றாரென்க. இக் கவியிலுள்ள மூன்று ஏகாரமும் அசைநிலைகள். இங்ஙனம அந்தர்முகமாக நம்மை யாக்கியது நாமே யன்றோ வென்று ஆழ்ந் துரைகொள்ளற் றென்க. மனத்தைத் தன்னிற் கரைப்பதுந் தானே யாகுதலும் பயனென்பது கருத்து. (௨௫)

(௮-கை)

ஆன்ம சைதன்யமே சகத்தென்றது கெம்பீரமாய்க் கூறுவதை யன்றி யுண்மை யாகுமாவென்ற மாணாக்கனை நோக்கி இக்கவியில் உத்தரங் கூறுகின்றது.

கண்ணலாற் காட்சியுண்டோ காதலாற் கேட்பதுண்டோ
விண்ணலா லேதும் விரிந்ததுண்டோ - வெண்ணுங்காற்
கானலா றோடிவரக் கண்டதுபோற் றோற்றுகினுந்
தானலா துண்டோ சகம்.

(இ-ரை) "கண்ணலாற் காட்சி யுண்டோ காதலாற் கேட்பதுண்டோ விண்ணலா லேதும் விரிந்ததுண்டோ" எ-து. கண்ணறிவை யன்றிக் காணப்படுபவைகளும், செவி யுணர்வை யன்றி ஒலி விகற்ப பேதங்களும், பூதாகாயத்தை யன்றி யாதாயினும் பல விகற்பமாக விரிந்து நிற்பவைகளு முளவோ? "எண்ணுங் காற் கானலா றோடிவரக் கண்டதுபோற் றோற்றுகினுந் தானலா துண்டோ சகம்" எ-து. சுவானுபவத் தேர்ச்சியா லுன்னுமிடத்து நடுப்பகலிற் சூரிய கிரணம் பாலநிலத்தில் வெகு வேகமா யோடி வருகின்ற ஆறுபோற் காணத் தோற்றினும் அந்த ஆறானது எங்ஙன மின்றே, அதுபோலச் சைதன்யமாகின்ற தன்னைத்தவிரச் சகத்தென்பது வேறாக வுளதோ? —எ-று.

இக்கவியிலுள்ள நான்கு ஓகாரமும் இல்லை யென்னும் பொருட்டாலால் எதிர்மறை. தாஷ்டாந்தம் அபேதமாக நிற்க, அதனை விளக்கப் புகுந்த திருஷ்டாந்தம் அபேதமா யிருக்கவேண்டு மன்றே? அபேதந் தானெனின், காணப்படுபவைகளும் கேட்கப்படுபவைகளும் மண், நீர், அனல், வளி யென்னு நான்கு பூதங்களுங் கண்ணுணர்வு செவி யுணர்வு ஆதாயமாகுமா? இஃதன்றியுங் கானலா றோடிவர வென்றதும் திருஷ்டாந்த மன்றோ? இஃதபேதமாயதுபோல ஏனைய மூன்று திருஷ்டாந்தங்களும் அபேதமாகச் சொல்லாற் கூறினும் பொருளால்

அமையுமோ? அமையு மெனின், தேற்றேகாரந் தராத தென்னை தந்து பொருள் கொள்ளுது மெனின், கண்ணுணர்வே பூதபவுதி மாகுமா? ஆகுமெனின், அறிபடு பொருளாகா திருக்கவேண்டு அங்ஙன மாகாதிருக்க முடியுமா? அங்ஙன முடித்துத் தெரிவிப்பத பால் அடுத்துக் கேட்டுத தெளியாத தென்னை? தமிழ் வெள்ளை யா லால் ஆழமும் வெள்ளையோ? இது நிற்க யாம் கூறுதும். ஐயறிவி கண்ணையும் பஞ்சபூதங்களில் மண்ணையு மெடுத்து வாதிக்குந்து கண்ணெனல் அறிவறியாமை யடுக்குசுட்டும், மண்ணெனல் உட தான வுபாதேய வடுக்குசுட்டும் இயையாமல் இந்தச் சடசித்துகளை பொருளாக வமைத்துக் கூறப்புகின் குணமாக முடியுமன்றி இருந்த லன்றே குணியாக முடியும்? முடியா விடத்துச் சூனியமாக நிற் மன்றே? அங்ஙனம் பல்லூழிகாலம் நிற்கின் சிவப்பாழ், சிவப்பாழ், பர பாழ் இவை நிரையே தோன்றும். அதனைத்தான் கிரியா யோகிகள குண்டலசத்தி யென்பர். மருளகலாததால் அந்த இருளகலாது. இ ஙனம் நெடுங்காலம் பழகப் பழக அங்கே ஒளி மின்மினி போன்றும் தீபம் போன்றும், நட்சத்திரம் போன்றும், நிலவு போன்றும், தின கரன் போன்றும், பற்பல தினகரர் போன்றும் இலகிப் பின்ன உபாதி ரகிதமாகக் காணும். அவ்வாறு பலகாற் பழகப் பழகச் சச்சி தானந்தம் அதிஷ்டானமாகவும், சக சீவ பரம் ஆரோபமாகவும் காண ப்பட்டு விருத்தி திருஷ்டாந்தம் போலவும், விவர்த்த திருஷ்டாந்தம போலவு மாகும். அங்ஙன மாய நிலையினின்றும் கணிக்கின அமையு மே யன்றிக் கற்பனை பறிவாற் கற்பனை திரிசயத்தைக் கணிப்பதுபிறவி க்குருடன் சூரிய விலக்கணத்தைக் கண்டு களித்தாற் போலும். இவ் வளவு எட்டி யறியாவிடத்துக் கணித்தல் பொருந்தா தென்க. இது அபக்குவத்தைப் பக்குவ மெனவும், அநாசிரியரை ஆசிரிய ரெனவுங் கொண்ட குற்றமே யன்றி வேறன்று. இவ்வளவு தெரியாதவரா இந் நூலாசிரியர்? விசாரித்துத் தெளியாது இவர்மேற் குற்றஞ்சாற்றல் முறை யன்று. இவர்மேற் குற்றஞ் சாற்றுவார் "அகரமுதல வெழுத்

தெல்லா மாதி பகவன் முதற்றே யுலகு'' என்னுங் கவிக்குங் குற்றங் கூறுவார் போலும்! அனைத்துந் தன்னை யன்றி வேறின் றென்பது கருத்து. (உ௬)

(அ - கை.)

அங்ஙனமாயின், காண்பானும் காட்சியும் வேறாகக் காணப்படு கின்றனவேயென்ற மாணுக்கனை நோக்கி இக்கவியில் உத்தரங் கூறு கின்றது.

என்னைத் தவிரமற்றிங் கேதுமில்லை யென்றனை
பொன்னைத் தவிரவிலாப் பூடணம்போற் - பொன்னையுரு
வேறாக்கிப் பேருரைத்த வேற்றுமைபோ னம்மையுமவ்
வாறாய்ப் பகுத்துரைத்தோ மால்.

(இ-ள்.) "என்னைத் தவிர மற்றிங் கேதுமில்லை யென்றனை பொன்னைத் தவிர விலாப் பூடணம்போல்'' எ-து. என தெதார்த்த வடிவமாகின்ற சுத்த சைதன்யத்தை யன்றி "எங்கப்பாலை''யதற்கு வேறிருத்தமாக யாதொரு பரமாணுவேனும் எங்கணு மில்லவே யில்லை; யாதுபோலு மெனின், பொன்னினது எதார்த்த வடிவை யன்றிப் பூடணமெனல் கினைந் தனையேனும் எங்கணு மில்லவே யில்லை யென்ப தெங்ஙனமோ, அதுபோன்று, "பொன்னையுரு வேறாக்கிப் பேருரைத்த வேற்றுமைபோ னம்மையு மவ்வாறாய்ப் பகுத்துரைத் தோமால்'' எ-து. பொன்னெனல் யாதோ, அதனை வெவ்வேறு பற்பல விநோத வடிவங்களாக்கி அவ்வவ் விகற்ப வடிவங்களுக்குத் தக்க காரணக் குறியாகப் பெயர்களுரைத்த வேற்றுமைப் பேதங்க ளெங்ஙன மோ, அதுபோல நம தெதார்த்த வடிவினையும் அப்படியே பற்பல வாக வகுத்துக் காரணக் குறியாகப் பற்பல நாமங்களை யுரைத்தோம், ஆதலால் இதிற் சற்றும் ஐயமில்லை—என் று.

தன தெதார்த்த வடிவினைக் காணுதார்க்கு இந்நூல் முழுதும் முரணு மன்றோ? முரணினும், அறிவும் அறிவினது விகற்பமும் என்

தெந்த வேதவிஞலு முரணுதற்கியைபுமோ? முரணவே முரணுவென வற்புறுத்தப் பொன்னேயும் அதனது பற்பல விகாரங்களேயும் அவ்வவ ற்றிற்கியைய அமைத்த பெயர்களேயும் உவமானமாக்கிய வென்க. மற் றென்பது "மற்றொன்று சூழினும்" என்பதுபோல் நிற்றலின் பிறி தென்னும் பொருள தென்க வாளாகூறுது 'என்ஞனே' என்றத ஞல் எவரும் என்னேப்போல் ஆராய்ந்து தற்றரிசனத்திற் கண் டிதனே யேற்கற்பாலராவரென்னுந் துணிபு தொனிக்கக் கண்டாம். காணவே, பகிர்முகத்தால் ஆபுஞ் சொல்லாற்றலே விடுகவென்பதாயிற்று. தற் றரிசனத்தில் விடாது நிற்கின் அயலாகக் காணப்படுவ தின்றென் பதுகருத்து. பொன்றைட்ட மகலின் பணிகள்காணுதசலுமோ? பணிகள் அகலினும் நிற்கினும் பொன்னிற்கு நட்டமென்னவென்னுந் தன் கருத்தை இக்கவியில் வெளிப்படுத்தியவாறு காண்க. (உ௭)

(அ - கை.)

இவ்வனுபவம் நவநவமாக நிற்கும் நிலேகளிற் றனித்தனி யொவ் வொன்ருகக் கூறவேண்டுமென்ற மாணுக்கனே நோக்கி இக்கவி யாதி ற்கும் எட்டப்படா தென்பதைக் கூறுகின்றது.

வாக்கிற்கு மெட்டா மனத்திற்கு மெட்டாது
தேக்கிட்டா லுந்தெவிட்டாத் தெள்ளமிர்த - நாக்கினீ
ரூறல்போ லெம்மிலே யூறியூ மைக்குடம்போல்
வேறறநா மாவிருந்தோ மே.

(இ-ரை.) "வாக்கிற்கு மெட்டா மனத்திற்கு மெட்டாது தேக் கிட்டாலுந் தெவிட்டா" எ-து. சுருதிகளுக்கும் எட்ட முடியாது; பகிர்முக மனத்திற்கும் எட்டமுடியாது; பூரணமாக நிறையினும் விஷயங்கள்போல் தெவிட்டாது; "தெள்ளமிர்த நாக்கினீரூறல்போ லெம்மிலே யூறி யூமைக்குடம்போல் வேறறநாமா விருந்தோம்" எ-து. உட்கொண்ட தேவாமிர்தங் காரணமாக நாக்கில் நீர் கசிவ தெய்வன

மோ, அதுபோல இந்த ஞானமிர்தம் உட்கொண்ட காலமுதலாக யாமாகின்ற அறிவின்கண் ணூறித் தன்மயமாக்கியது; அதனாற் றன்னிடத்தில் யாதொன்றும் எலாது வறுமையினிற்கும் ஊமைக்குடமெங்ஙனமோ, அங்ஙனமே வேறாகி யாதோர் கற்பனைகளு மின்றி நாமே நாமாக விருந்தனம்—எ - று.

சற்குருவினது பூரணவருள் வாய்க்காதவிடத்து எங்ஙன மெட்டுமென்பார் 'வாக்கிற்கு மெட்டா மனத்திற்கு மெட்டாது' எனவும், அறிவானந்த மீதலின் 'தேக்கிட்டாலுந் தெவிட்டா' எனவும், யாது அபாயம் வரினுந் தேவாமிர்த முண்டவனுக் கஃதுயிருக்கு வரச்செய்யாததுபோல யாதொலேனுங் கலங்கினும் உணர்வு கலங்காமைபற்றி ஞானமிர்த மூறிவருவதால 'எம்மிலே யூறி' எனவும், யாதொன்றும் பெய்யாமல் வைத்த வூமைக் குடமெங்ஙனமோ அங்ஙனமே சகல கற்பனைகளையும் நம்மில் நீக்கச் செய்ததால் 'வேறற நாமாவிருந்தோம்' எனவுங் கூறியவாறு காண்க. யாதோர் கற்பனையுமின்றென்பதருத்தம். எட்டாத தெவிட்டாத வென்பன விரண்டுங் கடைக்குறைந்து நின்றன. எம்மிலே யூறலாவது சொப்பிரகாசம் அனுவனுவாக நாளுக்குநாள் மேலிட் டிடைவிடாது வருதலே. (௨௮)

(அ - கை)

அறிவே வடிவாயிருப்பா யென்பதை இக்கவி கூறுகின்றது.

எதுசிவா னந்தமோ வேதுசிவா காரமோ
வேது சிவன்செயலோ வென்றதே - யேதும்
பிறிவாகா வொன்றாகாப் பேதமா கா[illegible]
அறிவா நிறைவே யது.

(இ-ரை.) "எதுசிவானந்தமோ வேதுசிவாகாரமோ வேதுசிவன் செயலோ வென்றதே", எ - து. சிவானந்தமென்பது யாதோ, சிவாகாரமென்பது யாதோ, சிவன்செயலென்பது யாதோவென்று. ஐய

முறுமல், "எதும் பிறிவாகாவொன்றாகாப் பேதமாகாத வறிவாநிறை வே யது" எ-து. தினைத்துணையுந் தண்ணீரைப்போலப் பிறிவுபட நின்றதும் மீண்டும் பிறிவுபடாதுநின்றதுமாகிய பேதஞ் சிறிதுங்காணாத ஞானப்பிரகாசமாகிய பரிபூரண சொரூபமே யதுவாதலால்—எ-று.

இக்கவியிலுள்ள மூன்று ஒகாரமுஞ் சுருதிவாசனையினாற் றணிபு பெற நில்லாமையின் ஐயம் பிறிவுபடுத்தினாற் பிறிவுபடுவதுபோலவும், ஏகப்படுத்தினால் ஏகப்படுவதுபோலவுங் காண்டலேயன்றி யங்ஙன மாகாது, என்று மொருதகைத்தாய் நிற்றலின், அஃதிருந்த வண்ணம் நீ யிருக்கின் உன் ஐயமெல்லாந் தானே தவிர்க்குமென்பது கருத்து. இவையதற் கிடம்பெறாத மாசற்ற பரம்பொருளைத் துவிதமெனவும், விசிட்டாத்துவிதமெனவும், அத்துவிதமெனவும்இவையதற்குரைக்கத் தக்கூறியது இனி ஐயந் திரிபு வராமைக்கென்க. அறிவானந்தத்தைச் சிவானந்த மெனவும், அறிவாகாரத்தைச் சிவாகாரமெனவும், அறிவி னது புணர்ப்பெயர்ச்சியைச் சிவன்செயலெனவுங் கொள்ளாக்கிடந்தமை காண்க அறிவினது நிலை யெங்ஙன மெங்ஙனமோ, ஆங்ஙன மங்ங னமாய் நிற்றல் ஆனந்தமாதலின், 'அறிவா நிறைவே' அதுவென்றார். அறிவு: சோபாதிக நிருபாதிகத்தோடு கலந்து நிற்கின் ஆனந்தமும் அந்நிலையதாமென்க. அறிவாநிறைவே யதுவென்பதில் ஏகாரந்தேற்றம், ஆனந்தத்தை விளக்க நிற்றலின். (உ௯)

(அ - கை.)

தானெனலே தெருளும் மருளுமாய் நிற்றலின் இருபக்கமுஞ் சாயாது நிற்கின், அதுவே சாந்தமாமென்பதை இக்கவி கூறுகின்றது.

தானறியுந் தத்துவங்க ளெல்லாந் தனக்கனியந்
தானதுவே யன்றென்று தள்ளுங்கால் - ஞானமாந
தள்ளுமவ னிருக்குந் தன்னாற்று னென்றுணர்ந்து
கொளளுமது வேசாந்த மாம்.

(இ-ரை.) "தானறியுந் தத்துவங்களெல்லாந் தனக்கன்னியந் தான துவேயன்றென்று தள்ளுங்கால்" எ - து. தன்னாலே தானறியப்படு வனவாகிய நிலமுதலாக நாததத்துவ மிறுதியாகக் கிடந்த தத்துவக் குழாங்களனைத்துந் தானெனற் கன்னியமாக நிற்கினும் ஆராய்ச்சியின் கண் தனன் அவையல்ல வல்லவென நியதிகளையப்பட்டுக்கொண்டே வரும்; அங்ஙனம் கழிபடத்து, "ஞானமாத் தள்ளுமவனுவிருக்குந் தன்னுற்றுனென் றுணர்ந்து கொள்ளு மதுவே சாந்தமாம்" எ - து. ஆராய்ந்து தெளிந்து தள்ளுவது மெய்யுணர்ச்சியன்றே? அந்த மெய் யுணர்ச்சியாய் நிலைபெயர்று மியற்றுதற் கருத்தாவாகிய தானென்பத னாலே இங்ஙனம் இருமையுமாயினனென் றுணர்ந்து திடம் பெறுவதே யுபசாந்த நிலையெனப்படுவதாம்— எ - று.

தன்னைத் தானுணர வறியாமையால் தத்துவங்களைத் தனக்கு அன்னியமெனவும், பன்மையி னொருமையுமென்று வழுவலமதி யிரு ப்பதால் 'தானதுவே' எனவும், தானேஞானமாய் நின்று இவை யனை த்தும் மெய்யெனக் கொண்டதென்பதைக் குறிப்பிக்க 'ஞானமாத் தள்ளுமவனுவிருக்குந் தன்னுற்றுன்' எனவும், ஈரிடத்தும் இயற்றுதற் கருத்தாவாயும், வலிதற் கருத்தாவாயும் அறிவறியாமையை யியக்கலின் தானென்பதே யுண்மையென் றனுபவ பூர்வமாகத் திடங்கொண்டு நிற்பினும் உபசாந்தமென்றற் கிட மின்மையின் 'என்றுணர்ந்துகொள் ளு மதுவே சாந்தமாம்' எனவுங் கூறியவாறு காண்க. உபசாந்த மெ ன்றது சாந்தமென நின்றது. தானெனவே ஞானஞ்ஞானமாய் நிற்கு மென்பது கருத்து. (௧0)

(அ - கை)

உபசாந்தமே நிலையாயின் சிவமாகத் தான் யாதோவென்ற ஐயம் நீங்க, அதனை இக்கவி கூறுகின்றது.

சாந்தமே தற்சாட்சி தற்சாட்சி யேபிரமம்
சேர்ந்த பிரமமே பூரணமா - மாய்ந்துணர்ந்த

சுத்தபரி பூரணமே தோன்றாச் சுவானுபவஞ்
சித்தநிலை தானே சிவம்.

(இ - ரை.) "சாந்தமேதற்சாட்சி தற்சாட்சியேபிரமம் போந்தபிர மமே பூரணமாம்" எ - து. முன்னர்க்கூறிய உபசாந்தமென்பதே தற் சாட்சியென்பதும், தற்சாட்சியென்பதே பிரமமென்பதும், அங்ஙன மெழுந்த நிலையினதாகிய பிரமமென்பதே பரிபூரண நிலையென்பதும், "ஆய்ந்துணர்ந்த சுத்த பரிபூரணமே தோன்றாச் சுவானுபவஞ் சித்த நிலைதானே சிவம்" எ - து. சுருதி குரு சுவானுபவத்தாலாராய்ந்து தெளிந்த களங்கரகிதமாகிய அந்தப் பரிபூரணமாய் நின்ற நிலையே மேலொன்றுந் தோன்றற்கரிய சுவானுபவநிலையென்பதும், அங்ஙனம் நிலைத்த நிட்சித்தமென்பதே சிவமென்னப்படும் நிலையென்பதுமாம் —எ - று.

சாந்தமே தற்சாட்சியெனல் வழக்கற நிற்றலே மெய்யுணர்ச்சியா மென்கை; தற்சாட்சியெனல் எல்லா அவத்தைகள் மாறினும் மெய் யுணர்ச்சி மாறாமனிற்கை; தற்சாட்சியே பிரமமெனல் அவவறி வே யானந்தமாய் நிற்கை; பிரமமே பூரணமாமெனல் அவ்வானந்தம் பரிச்சேதகோட மடையாமல் எங்கும் வியாபித்து நிற்கை; சுத்த பரி பூரணமே தோன்றாச் சுவானுபவமெனல் அங்ஙனமாய வியாபகஞ் சோர்வுறாது அதீதப்பட்டு நிற்கை; சித்தநிலைதானே சிவமெனல் அவ் வதீதம் போல்வ தொன்றின்றெனத் திடங்கொள்கை. அதீதத்தினும் மேலாய தின்றென்பது கருத்து. இக் கவியிலுள்ள நான்கு ,ஏகாரமுந் தேற்றம். (சக)

(அ - கை)

மாயையென்பதுஞ் சாயுச்சியமென்பதும் இனையவெனவ இக் கவி கூறுகின்றது.

சித்தும் பிறந்து செகம்பிறந்து நானெனவோர்
கத்தன் பிறந்தவழி கண்டோமே - சித்த

மடங்காமை யேமாயை யம்மாயை மாய்ப்பார்
திடந்தானே சாயுச் சியம்.

(இ - ரை.) "சித்தம்பிறந்து செகம் பிறந்து நானெனவோர் கத்தன் பிறந்த வழி கண்டோமே" எ - து. ஒன்றுமொருதகைத்தாய்ப் பரிபூரணமாக விளங்கிநிற்குஞ் சைதன்னியத்திற் கயிற்றிற் பாம்பு போல் அயிரந்தரமாக ஓர் நினைவுதித்து அந்த நினைவே சகத்தாகப் பரிணமித்து அங்ஙனம் பரிணமித்தலால் யானல்லாததை யானென்னும் ஒரகங்காரி கர்த்ருத்துவமுஞ் சேதனத்துவமுமுடையவன்போற் செனித்த வகையை இப்போது பிரத்தியட்சமாகத் தெரிந்தோம்; "சித்தமடங்காமையே மாயை யம்மாயை மாய்ப்பார் திடந்தானே சாயுச்சியம்" எ - து. இங்ஙனமாய காரணத்தை விசாரித்துத் தெளிதும் அங்ஙனஞ் சித்தந் திடமுறாமையே மாயையெனலும், அங்ஙனமாய பிராந்தியை ஒருங்கே தொலைத்து நிற்கும் ஞான்கள் சித்தக்கலக்கமின்மையே சாயுச்சியமெனலுமாம்—எ - று.

கண்டோமே என்பதில் உள்ள ஏகாரம் அசைநிலை. அடங்காமையே, திடந்தானே யென்பவற்றிலுள்ள ஏகாரங்கள் வேறன்றெனக் காட்ட நிற்கையாற் பிரிநிலையெனினும் அமையும். நானெனவோர் கத்தனென்பது மலடிமைந்தனென்றாற்போலும். திடந்தானென்பது தேர்ச்சித்தெளிவு மிகுதலே. தினச்சுழுத்தி கலையுங்கால் இதனை யாங்குற்றுணர்ந்து நோக்கிற் பகிர்முகத்தில் இங்ஙனமாவது நிகழுமாயின், அந்தர்முகத்தில் இங்ஙனம் நிகழ்வதைப் பிற ருணர்த்த வேண்டுமோ? தானே அங்ஙனமாய நிலைக்கண் கண்டுகொள்ளலாமென்க. தன்னைத் தான் மறந்த மறதியே நினைவாக ஸ்புரித்து அந்த ஸ்புரிப்பே சகத்தாகத் தடித்து அத்தடிப்பே ஏகதேசத்தில் அகம்பாவமாக நின்றதென்றறிக. இவ்வளவறியாதார் யாது கற்றுச் சாதித்தினும் உத்தரவாதியாகார். மண் முதலிய ஐம்பூதங்களில் ஒவ்வொன்றையுங் காரியவகைகளிற் செல்லா தவற்றைத் தத்தம் காரணவகையி லொடுக்கிக்

கொண்டு செல்லச்செல்லத் திரிபுடியென்பதின்றி வறிது நிற்குமன்றே? அவ்வற்றை மாயையெனவும், அதனை ஐயந்திரிபின்றித் தெளிந்த விடமே சாயுச்சிய மெனவுங் கொள்க. பொருளாற்றலாற் செல்லுமின் துக்கநிவிர்த்தியுந் தடையற்ற ஆனந்தமும் நேரே யெய்துமென்பது கருத்து. (௩௨)

(அ : ஙை.)

இவ்வனுபூதியிற் கலங்காது நிற்கின் சனனமரணத்தைப்பற்றி வரும் பயசம்பந்திக ளெய்தாவென்பதை இக்கவி கூறுகின்றது.

எல்லையற்ற சென்ம மெடுத்தோ மிறந்தோமென்
றல்லலுற்ற பீதி யழிந்தோமே - தொல்லுலக
மெல்லாங் கடுவெளியா மென்வடிவா மென்றன்வடி
வல்லாது பொய்யாத லால்.

(இ-ள்.) "எல்லையற்றசென்மமெடுத்தோமிறந்தோமென் றல்லலுற்றபீதி யழிந்தோம்" எ-து. இதுகாறும் இதுபோன்ற நாலுவிதமாயுள்ள பிறவிகளைக் கணக்கின்றி யெடுத்தோமென்றும், எடுத்தவாறே யதுக்கெல்லையின்றி யிறந்தனமென்றுங் கொண்டதால் அல்லலே மயமாயுள்ள பயசம்பந்திகளால் அழிந்துவிட்டோம்; 'தொல்லுலக மெல்லாங் கடுவெளியா மென்வடிவா மென்றன் வடிவல்லாது பொய் யாதலால்" எ-து. நீர்க்கசொப்பனம்போலப்பொய்யாயநாதியாய் நின்றுள்ள வுலகங்களனைத்தும் வெற்றவெளியாகத்தோன்றும் எமது சுயம் பிரகாச வடிவமே நிலையினதாக விளங்கும். இங்ஙனமான வெமது எதார்த்த வடிவத்தையன்றி வேறு கண்டிலோம்; அனைத்தும் மித்தையாதலின் — எ - று.

சென்மம் எடுத்தலும் இறத்தலுஞ் சுக்கில சோணிதங் கருவில், தனுவாகத்தடித்த அவசரத்திலேனும், நாழிகைக் கணக்குகளிலேனும், தினக்கணக்குகளிலேனும், வாரக் கணக்குகளிலேனும், மாதக்கணக்கு

களிலேனும், கருவைவிட்ட கன்றஅவசரத்திலேனும், நாழிகை, தினம் வாரம், மாதம், வருடம், யுகம் இவற்றுளொன்றிலேனும் எம்போன்ற உயிர்கள் மரித்தலைப் பிரத்தியட்சமாகக்கண்டு வருகின்றோம். இங்ஙனம் பிறத்தலும் இறத்தலும் அளவையில் அடங்காமையால் 'எல்லையற்ற' என்றார். இங்ஙனமாதற் கிடமாய்நிற்ப துலகமன்றோ? அதுவும் பிரவிர்த்தியாலுண்டெனவும், நிவிர்த்தியாலின்றெனவு மிவைதற்கிடம் பெற நிற்றலினானும் இத்தனையுஞ் சைதன்யத்திலென்று நிகழ்தலினானும் 'தொன்னிலுலகமெல்லாங் கடுவெளியா வென்வடிவாமென் றன்வடிவல்லாது பொய்யாதலால்' எனக் கூறியவாறு காண்க. அனைத்துஞ் சைதன்யத்தையன்றி யில்லையென்பது கருத்து. அழிந்தேமே யென்பதிலுள்ள ஏகாரம் ஈற்றசை, என்றுமெனலை யிரிடத்துமொட்டுக. ()

(அ - ௯)

விஸ்மரணையிற்செய்த கன்மபலனைத்தாம் தஸ்மரணையி லின்றென்பதை இக்கவி கூறுகின்றது.

காலங் கருதிக் கடவுளரைக் கைகூப்பிச்
சாலவிர தங்களெல்லாஞ் சாதித்தே - மேலுணர்வா
லீதெல்லா நாமலவென் றெண்ணியனந் தானந்த
போதநா மாகாத போது.

(இ - ரை.) "காலங்கருதிக் கடவுளரைக் கைகூப்பிச் சாலவிரதங்களெல்லாஞ் சாதித்தேம்" எ-று. ஓர் விரதமாக வுறுதிகொண்டு பகலில் முக்காலத்தையும், இரவில் முக்காலத்தையும் விடாது கருதித் தத்தம் இஷ்டதேவதைகளை மிக்க அன்புகொண்டு கைகுவித்து நாங்கொண்ட விரதங்களனைத்தையும் உடல்மெலிய சாதித்துவந்தோம்; "மேலுணர்வா லீதெல்லாநாமலவென்றெண்ணியனந்தானந்த போதநாமாகாத போது" எ - று. பின்னர் இவற்றில் எய்ப்புவந்துழி மெய்யுணர்ச்சியென்னும் சுவயம்பிரகாசங்கொண்டு மேற்கூறிய கன்மங்க

ளைத்தும் நான் சிறிதுமல்ல வல்லவென்று நியதிகளைந்து ஸ்திரவுணர் ரல் திடங்கொண்டு சர்வ காமாப்திகமென்னும் போதவடிவம்யாமா ரத அவலசாவத்தில்—எ - று.

காலமாறுவன:—பகலில் காலை, மாலை, நடுப்பகல்களும்; இர ல் முதல், இடை, கடையென்னும் சாமஙகளுமாம். சாலச்சாதித்தே மன முடித்துப் பொருள்கொள்க. சச்சிதானந்த விலக்கணத்தை யையப்பெற்ற வுணர்வெனல் யாதோ அதனை மேலுணர்வெனவும் பாதிசகிடமாக நின்றனுபவிக்கும் எல்லாச் சுகங்களும் இவ்வனுபூதி லையுடையோனுக்கு வேறன்மையின் அனந்தானந்த போதமென ங் கோடற் கேற்றமை காண்க. ஆகாதபோதெனவே உடன்பாட்டிற் ாதிக்கேமெனக் குறிப்பிக்க நின்றது. மெய்யுணர்ந்தார் செய்பினுஞ் 'சய்திலரெண்பது கருதது. (௩௭)

(அ - ஸை.)

இவ்வனுபவம் வாய்ப்பது நின்மல சித்தர்க்கெனலை இக்கவி கூறு ின்றது.

ித்தியமா வேகமா நின்மலமாப் பூரணமாச
சத்தியமா நின்றொளிருந் தற்போதகு - சுத்தராய்ச்
சித்தநிலை பெற்றவராயத் தீர்ந்தரென னத்நவரா
புத்தமரா வுள்ளார்க் குறும்.

(இ - ரை) "நித்தியமா வேகமா நின்மலமாப்பூரணமாச் சத்திய மா நின்றொளிருந் தற்போதம்" எ - து. நிரந்தரமாயும், துவிதமற்ற ாயும், மலரகிதமாயும், பரிபூரண நிலையினதாயும், பூர்வபட்ச மாக்கற் கியைந்தது அன்மையாயும் நின்று விளஙகுவது யாதோ, அந்தத் தானே ானுகின்ற தற்போதமானது: "சுத்தராய்ச் சித்தநிலை பெற்றவராய்த் தீர்ந்த செனனத்தவரா வுத்தமரா வுள்ளார்க் குறும்" எ-து. பிராந்தி யற்றவராயும், சித்தந் திடமுற்றவராயும், இனிப் பிறவிக் கியையாதவ

ராயும்; சன்மார்க்கத்திற் சலியாசகராயும் நிற்பார் யாவரோ, அவர்க்கே தப்பாமலெய்தும்—எ - று.'

'என்றும் ஒருதகைத்தாய் விளங்கலின் நித்தியமாயெனவும், சலன மற்ற கண்ணுடையார்க்கு விளங்குவது உண்மைவடிவமாதலின் ஏக மாயெனவும், சுசாதி முதலிய பேதமின்மையின் நிமலமாயெனவும், காலபரிச்சேதங் கடந்தமையின் பூரணமாயெனவும், பொலியன்றாத லின் சத்தியமாய் நின்றொளிருமெனவும், இனி யெய்தும் ஆகாமியங்க ளனைத்துஞ் சிங்கத்தின்முன் யானைபோற் காண்டலின் தீர்ந்த செனன த்தவராயெனவுங் கூறினா ரென்க. இழக்க வேண்டுமென்பார் கூறுந் தற்போத மீதென்னற்க. என்னெனின், உறுமென லுடன்பாட்டிற் கியைவதாக முடிதலின், தானேதானாகிற போதமென் றுரைகொண் டாம் இதனை மறுப்பார் தற்றெரிசன மில்லார்போலும். சத்தியமா யானந்ததற்போதமென்பாருமுளர்; இஃதேற்குமாறு கண்டுரைகொ ள்க. வினையோர்க் கிந்நிலையுறுதலெஃபது கருத்து. (சரு)

(அ - கை)

இக்கவி முதல் ஐந்து கவிகளாலும் பக்தன்களது நடை இங்ஙன மெனக் கூறுகின்றது.

வெட்டெனவும் பேசார் வெகுளார் முகங்கோணா [ர்
ரிட்டபதார்த் தம்பெரியோர்க் கேற்றுவைப்பார் - துட்டரை
சேரா ரியாவர்க்குந் தீங்குரையார் கண்சிவந்து
பாரார் பிறவிதீர்ப் பார்.

(இ - ரை.) "வெட்டெனவும் பேசார் வெகுளார் முகங்கோணார் இட்டபதார்த்தம் பெரியோர்க் கேற்றுவைப்பார்" எ - து. உபசாந்த நிலைமேவிட்டிருப்பதால் கடூரமாகவும் பேசார், கோபியார், முகஞ் சுளியார், தமக்குப் பிறரிட்ட பதார்த்தங்களைத் தம்மைப்போலுள்ள சத்துக்களுக்கும் ஏற்கும்படி செய்வர்; 'துட்டர்களைச் சேராரியாவர்

மாருதமேயென்ற நடுக்கம் விடாமையினால் 'சாதல் மறவார்' எனவும் அறிவுக்கணுவுமயலல்லவாதலின் 'கருத்திளகி மண்ணுலகில் வாஞ்சை பிறவார்' எனவுங் கூறியவாறு காண்க. 'கருத்திளகி மண்ணுலகில் வாஞ்சை வைத்தல்: மண், பெண், பொன், மகன் என்பவற்றில் ஆழ்ந்த சிந்தையுடையோர் அவற்றிற்கு நட்ட மெய்தியவழி அவர்கள் படும் வாதைக்கிரங்கி 'வாஞ்சை பிறவார்' எனினும் அமையும்; மங்கையர் அவயவங்களி லொன்றைநோக்கி 'வாஞ்சை பிறவார் எனினும் அமையும். ஓதலுருக லொழிந்திராரெனற்குச் சான்றோரியற்றிய சுவானுபூதி நூலை வாசித்தலிலும், அதுபற்றி யுருகுதலிலு மொழிந்திராரெனினும் அமையும். பிறக்குமவரெனின் இந்நான்கு வினைமுற்றும் எதிர்மறையாகாவென்க. (௩அ)

(அ-கை.)

இதுவுமது.

சித்த சலனந் திடுக்கெனவுஞ் சற்றுமுறார்
முத்திவழி கேட்கவே மோகிப்பார் - புத்திபோய்
மாடெனம வீடுமனை மக்கள்செல்வ மாச்சரியங்
கூடியழுந் தார்பக் குவர்.

(இ - ரை.) "சித்தசலனந் திடுக்கெனவுஞ் சற்றுமுறார், முத்திவழி கேட்கவே மோகிப்பார்" எ - து. தமது சித்தத்தின்கண் யாது அபாயம் நேரிடினும் கலங்குதலும் நடுங்குதலுஞ் சிறிதுமடையார்; ஐக்கியநிலைக் கியைந்த விடுதியாகிய முத்திக்கே மிகவும் மோகித்துழல்வார், "புத்திபோய் மாடெனம வீடுமனை மக்கள் செல்வமாச்சரியங் கூடியழுந்தார் பக்குவர்" எ - து. தமது புத்தி மெல்லச் சென்று நமது மாடெனவும், நமது வீடெனவும், நமது 'பெண்சாதி'யெனவும், நமது புத்திரர்களெனவும், நமது செல்வமெனவும் அதிசயமாகக்கூடி அழுந்தினுந் தாங்களழுந்தார்; விடுதிநிலைக்கே யியைந்த பக்குவர்— என்றவாறு.

கேட்கவே யென்பதில் ஏகாரம் தேற்றம். மாடு, வீடு, மனை, மக்கள், செல்வம் என்பன பலவாதலின், நமவென்பதைத் தன்மைப் பன்மை ஆறும்வேற்றுமை யாக்கினார். நமவென்பது இடைநிற்றல் திவசமென்க. அழுந்திலும் என்பது இசையெச்சம். புத்திபோய்க் கூடி யழுந்தார் என்பதில் சினைவினை முதலொடு செறிந்தது. 'சினைவினை சினையொடு முதலொடுஞ் செறியும் என்றிலக்கணமிருத்தலாலென்க. உழுறரென்ற பயனிலைக்குச் செயப்படு பொருளாதலின், திடுக்கெனப் பாடமோதி யுரைகொண்டாம். (௯௯)

(அகை.)

இதுவமது.

ஆர்க்கு வருவிருந்தென் றுவனவும் போவனவுந்
தீர்க்கநிலை யன்றித் தெளிவரே - பார்க்குங்காற்
சாந்தராய் நித்தியராய்த் தத்துவபோ தத்தவராய்த்
தீர்ந்தநிலை நின்றார் சிலர்.

(இ-ரை.) "ஆர்க்குவருவிருந்தென்றுவனவும்போவனவுந் தீர்க்க நிலையன்றித் தெளிவரே" எ-து. யாருக்கார் வருவிருந்தென்வும், யாருக்கெவை யேற்கற்பாலவையெனவும், தள்ளற்பாலவையெனவும், முன் பின்புள்ள தமது தீர்க்க நிலையையல்லாது ஐயந் திரிபறத் தெளிவார்களோ, "பார்க்குங்காற் சாந்தராய்நித்தியராய்த் தத்துவபோதத்தவராய்த் தீர்ந்தநிலைநின்றார் சிலர்" எ-து. உற்றுணருமிடத்து உபசாந்த நிலையினராகியும், போலியாகாது நித்தியத்துவமுடையாராகியும், மெய்யறிவினை யுடையராகியும், இனி யதொன்றுமேயுவம் பூர்வபக்ஷமாக்கறுதும், அங்ஙனமாதற்கும் இயையாத தீர்ந்த நிலையில் நின்றவர்களிற் சிலர்—எ-று.

விருத்திபெவரும அடைபவருஞ் சைதன்யமின்றி யின்மையானும், அங்ஙனமாய வின்மையிற் கொள்ளப்படுவென தள்ளப்படுவன வுளவோ; இல்லையே, ஆதலினானும் ஆர்க்கு வருவிருந்தென்றுவனை

காணுதவர் இழிவரே யென்பவற்றை யெழுவாய் பயனிலையாக் குக. இழிவரே யென்பவற்றிலுள்ள ஏகாரம் மறுத்தற் பொருளைத்தா நின்றதால் வினு. எங்கே மணி முளதோ அங்கே நினைவாகின்ற புடை பெயர்ச்சி யுளதாம். அஃதெங்குளதோ அங்கே சகத்தாகின்ற பரிண மிப்புளதாம். அஃதெங்குளதோ அங்கே திணைபாலிடக் கற்பித முள தாம. இங்ஙன மிருத்தலினாலும், பூதாகாயத்தையன்றிச் சலனத்தவ மாகின்ற காற்றுளதேற் சிதாகாயத்தையன்றி ஸ்புரிப்பாகின்ற மன மெனலுண்டாம். இங்ஙனமிருத்தலினாலும், சங்கற்பசாலச் சீசத்தோற் றரவெனற்கு யாது முரண்? தெரிந்ததுபோற் பிதற்றல் கர்த்தபப்போ லும். நனது எதார்த்த வடிவினைக்கண்டு நில்லாததாலெனக. இந்நிலை நிற்பார். ஆங்ஙனங் கிருத்தலின் றன்னையென்னுது தம்மை யென்றூர். தத்தமனத்தை விசாரித்தறதெளியாதார் அதன் பரிணமிப்பை யெங் ஙனம் தெளியவல்லார்? தன்னைத்தேடி யறியவல்லாதார், பரத்தைத் தேடி யறியவல்லார்போலு மென்க. சாலவித்தைபோ லிருத்தலின் சகத்தைச் சாலமென்றூர். முறையோ? வழுவோ? வழுவெனின், ஆதாரவாதேயங்கிக்குகள் அற்றிருக்கவேண்டும். அங்ஙனமின்றே, ஆக லின் முறையென்க. தம்மையன்றிக் காணுதவ ரென்பதனுல் அபாவ மெனல் சற்றும் இவர்க்கிலையென்பது கருத்து. (௪௧)

(அ - கை.)

சாஸ்திர வாசனை யேனும், அறிவறியாமை வாசனை யேனும், இவர்க்குமுற்றுந்தும்வாராவோவெனற்கு இக்கவியிலுத்தரங்கூறுகின்றது.

சத்தப் பிராந்தி சதசத்தாம் ப்ராந்தியெலாஞ்
சித்தப் பிராந்தியென்றே தேறுவார் - முத்தர்தா
மாரோப மாகு மவத்தைதொறுந் தோற்றியழி
யாரோபம் பொய்யாத லால்.

(இ-ரை.) "சத்தப்பிராந்தி சதசத்தாம் ப்ராந்தியெலாஞ் சித்தப் பிராந்தியென்றே தேறுவார் முத்தர்தாம்" எ-து. முன்னுணர்ந்த சாஸ்

திரவாசனையேனும், முன்னர் நியதிகளைந்த அறிவறியாமை வாசனை யேனும் ஒருகால் வரின், இவையனைத்தும் எமது சித்த விசற்பத்தா லெய்திய வாசனையாகுமென மயங்காது தெளியா நிற்பர் சீவன் முத்த ரெனப்படுவோர்; "ஆரோபமாகுமவத்தைதொறுந்தோற்றியழி யாரோ பம் பொய்யாதலால்" ஈ-து. மித்தையெனற்கியையும் புடைபெயர்ச்சி யாகிய சாக்கிரமுதலியஅவஸ்தைகளனைத்திலும் ஆங்காங்குத் தோன்றி யழிகின்ற காட்சிகளும், அபிமானங்களும், இன்னும் இவைபோல்வன பிறவும் பிரதிபிம்போபாதி யாதலினானும், மிகவும் மித்தையாம் ஆதலி னானும்—எ-று.

சத்தெனல் அறிவு. அசத்தெனல் அறியாமை. இவை யிரண் டிற்குந் தானெனல் இயைப்பிக்குங் கர்த்தாவாதலினானும், சித்தப் பிராந்தி சினை வினையாதலினானும் இவையிரண்டுந் தேறுவாரென்னு முதல்வினையோடு முடிந்தன, அறிவின் புடைபெயர்ச்சியையன்றி எவ்வித அவத்தைகளும இல்லாதிருக்கப் பரிணமிப்பையும் அவ்வவற்றி னெகிழ்ச்சியையும் எங்ஙனமெய்யென்றுரைக்குதும் ஆதலின், ஆரோப மாகு மவத்தை யெனவும், ஆரோபம் பொய்யாதலாலெனவுங் கூறிய வாறு காண்க. ஆரோபமெனலும் பொய்யெனலும் மீமிசையென் னற்க; வைப்புறுத்துவான்வேண்டியாதலின். என்றேயென்பதில் ஏகா ரந் தேற்றம். அவத்தைகளும், அவத்தைகளிற் றோன்றி யழிவனவுந் மித்தையென வோர் முடிவாய் முடிக்காது மூன்றிடத்தும் அதனையே கூறியது மறந்திடாதற் கென்க. பிராந்தியெனல் மயக்கம். ஆன்மா வாகிய யான் யாதுபிராந்தியும் அல்லாமையின்தேறுவாரென்றார். அனை த்துஞ் சித்தப்பிராந்தியெனத் தேறுவரன்றி மயங்காரென்பதுகருத்து.

(அ - கை.)

ஆ—மாவாகின்ற சைதன்யத்தையன்றிச் சகசிவபரமின்றெனலை யேற்கின் யாரையார்பூசித்தலெனற்கு இக்கவியிலுத்தரங்கூறுகின்றது.

தேகா லயத்திற் சிதாகாச தேவதையை
யாகாய சாந்தி மலராலே - யேகாந்த
மந்திரத்தாற் பூசைசெயு மாதவரை யாதரித்துச்
சந்ததம்வாழ் வார்க்கார் சரி.

(இ-ரை) "தேகாலயத்திற் சிதாகாசதேவதையை யாகாயசாந்தி மலராலே" என்-து. தேகமென்னும் ஆலயத்தின்கண் ஞானாகாயமென்னுந் தேவதையை அந்த ஞானாகாயசந்தி லென்று மியல்பினதாகிய உபசாந்தியென்னு மலர்களால், "ஏகாந்த மந்திரத்தாற் பூசைசெயு மாதவரையாதரித்துச் சந்ததம் வாழ்வார்க்கார்சரி" என்-து. சகல கற்பனைகளு மிறந்து தான்மாத்திரமாய் நிற்கும் ஏகாந்த மென்னப்படும் மந்திரத்தினால் இரண்டறப் பூசைசெய்கின்ற மகான்களை மிக்க வன்புகொண்டு எப்போதும் நிரதிசயானந்தவடிவமாய்வாழ்கின்றவர்களுக் கார் இணையாவர்?-என-று.

தேகாலயம், சிதாகாசதேவதை, சாந்திமலர், ஏகாந்தமந்திரம் இவை யுருவகம். இங்ஙனம் பூசித்தல் பேதமாகவோ? அபேதமாகவோ? பேதமாகவெனின் ஆலயம், தேவதை, சாந்தி, ஏகாந்தம் இவை அபேதமாக இயைவதற் கேது என்னைகொலோ? ஆதலின் வழு. வழுவறக் கிரியா பூசையினிற்போரும் இவர்களுக்கு இணையல்லவெனக் குறிப்பிக்க ஆர் சரி யென்றார். தன்னைத்தானே பூசித்த லென்பது கருத்து. மலராலே யென்பதிலுள்ள ஏகாரம் அசை. (௫௩).

(அ - கை.)

இக்கவியில் யாவரும் இங்ஙனம் இரண்டறப் பூசியாததற்கு ஏது என்னையென்ற வினாவிற்கு உத்தரம் கூறுகின்றது.

முக்கனியும் பாற்சோறு முன்பிருக்க நாயுருந்திக்
கக்கிய சோற்றைக் கருதுவா - ரெக்கலைக்கு
மெல்லாப் பொருட்கு மிரும்பொருள்யா மென்னுமவ்
வல்லார்க் கடிமைபுகு வார்.

(இ-ரை.) "முக்கனியும் பாற்சோறு முன்பிருக்க நாயருந்திக் கக்கியசோற்றுறைக்கருதுவார்" எ-து. வாழைக்கனி, பலாக்கனி, மாங்கனி யென்னு மிம்மூன்றும் இனிய பாற்சோறும் எதிரில் வாழையிலையில் படைத்திருக்க அதை யருந்தாமல் விட்டு விட்டு, நாய்தின்று கக்கிய அசுத்தமாகிய சோற்றைத் தின்ன கருதுவார்போலும்! "எக்கலைக்கு மெல்லாப்பொருட்கு மிரும்பொருள்யா மென்னுமல் வல்லார்க்கடிமை புகுவார்" எ-து. எவ்வகைப்பட்ட சுருதிகட்கும் அவற்றிற்கூறிய எவ் வகைப்பட்ட மேலாய பொருட்கட்கும் சிறந்த பொருள் யாமெனச் சுருதி, யுத்தி, அனுபவத்தாற் றெளியாமல் உடலாகிய மலமூட்டை யை வளர்ப்பான்வேண்டிப் பொருட்செல்வத்தில் மிக்கவலியுளார்க்கே அடிமையாக நின்றுழைப்பவர்—எ-று.

முக்கனியெனக் குறிப்பித்தது 'ஐவரொடு சினை இ' என்றாற்போலும். பிராதிபாசிக சத்தும், பிரதிபிம்போபாதியு மிருப்பதைக் குறிப்பா லுணர்த்த இரும்பொருள் யாம் என்றார். எனவே, யாமனைவரும் துற்ப போகத்திற்கே தனு கரண புவனம் பெற்று என்றும் உழல்வமென்பது பெற்றாம். வல்லார்க்கே யென்பதில் ஏகாரம் எஞ்சியது. விசாரித்துத் தெளியாதது அறியாமையா மென்பது கருத்து. (சசு)

(அ-கை)

சத்துக்களை யவமதிப்பா ரெங்ஙனமாவ ரென்பதற்கு இக்கவியில் உத்தரங் கூறுகின்றது.

செம்மை யறியார் செகத்தோற் றரவறியார்
தம்மையறி யார்விளையுந் தாழ்வறியார் - தம்மிலே
யந்தரராய் வீணே யவமதிப்பார் நல்லோரை
யெந்தவழி போவா ரிவர்.

(இ-ரை.) "செம்மையறியார் செகத்தோற்றரவறியார் தம்மை யறியார்விளையுந் தாழ்வறியார்" எ-து, துக்கநிவிர்த்திக்கியைந்த செய்

மையான் மார்க்கத்தையுங் கேட்டறியார்; செகத்திற்கு முதற்காரணம் இனையதென்றும் விசாரித்தறியார்; தமதெதார்த்த நிலை இனைய தென்று துணிவு பெற்றிருக்கவு மறியார்; அங்ஙனம் விசாரியாததால் விளையு மீனத்தையும் சிந்தித்து மறியார். "தம்மிலே யந்தரராய் வீணே யவமதிப்பார் நல்லோரை யெந்தவழிபோவாரிவர்" என்பது. இங்ஙனமாய வேதக்களால் தமது அகத்தில் அஞ்ஞானாந்தகாரத்தை யுடையவரா யிதோர் எதுவுமின்றி நல்லோர்களை அவமதித்துக்கொண்டே திரிவர். இவர்கள் எந்தப்பாதகத்திற்குப் போவார்களோ யாமறியேம்!—எ-று.

விசாரிப்புழிப் பாழாகவும் அஃதில்லாவழி நாம ரூபமாகவுந் தோற்றுவ தென்றும் இயல்பா நிற்றலின் செகத்தோற்ற வெனவும், புண்ணிய கன்மமேனும் பிறவிநோயைத் தரற்பாலதாதலின் விளையுந் தாழ்வெனவுங் கூறியவாறு காண்க. செய்யமார்க்கத்தைச் செம்மை யென்ற தாருபெயர். தீமைக்குப்பலன் வகுத்தலரிதாதலின் எந்தவழி போவார் இவரென்றார் எனவே, நிரயம் பலவாறு நிற்றல் பெற்றாம். எந்தவழி போவாரோ வென்பதில் ஓகாரம் எஞ்சியது. நரகமே தமது கதியாவரென்பது கருத்து. (சுங)

(அ - கை.)

ஞானகாண்டப்போற் கன்மகாண்டஞ் சிறப்புறுததற்கு ஏது என்னை யென்றற்கு இக்கவியி லுத்தரங் கூறுகின்றது.

ஐங்கணையும் பூவா மறுகா லளிநாணு
மென்கரும்பாம் வில்லனங்கன் வீரனும் - வன்காத
லேற்றுவனு மெல்லாம்பொய் யிப்படியே பாருலகத்
தோற்றமெலா மெய்தானு சொல்.

(இ-ரை) "ஐங்கணையும் பூவா மறுகாலளிநாணு மென்கரும்பாம் வில்லனங்கன் வீரனும்" எ-து. மன்மதனுக்குப் பஞ்சபாணங்களும் புஷ்பங்களாம்; ஆறுகால்களையுடைய வண்டுகள் வில்லிற்கட்டும்கயி

ரம், அவனுக்கு வில்லோ மிருதுவாகிய கரும்பாம், இந்தப் பாணங்
களை யெறியும் வீரனோ வடிவமில்லாதவனும்; "வணங்காத லேற்றுவனு
மெல்லாம் பொய் யிப்படியே பாழுலகத் தோற்றமெலா மெய்தானு
சொல்" எ-து. இவனே யாரிடத்தும் மோகத்தை விளைவிப்பவனும்,
இவையனைத்தும் அந்தர்முகத்துக் கியையாமையின் சமஸ்தமும் பொய்
யேயாம். இதுபோலவே பாழாகிய வுலகமும் சராசரத் தோற்றமும்
அவற்றின் புடை பெயர்ச்சிகளும் அவற்றுலெய்து மின்பத் துன்பங்
களும் மெய்யாகுமா? இதனை நீயே யாராய்ந் துணர்ந்து சொல்லு—
ர - று.

ஐங்கணையாவது "முல்லையரும்பு முழுநீலஞ்சூதப்பூ, வல்லிமுளரி
யோடைந்து" என்பதனுற் காண்க. இவை யனைத்தும் ஒன்று ஒன்
றாகக் கற்பிக்கப்படுவனவே யன்றி யுண்மையாகுமா? ஆகுமெனின்
விரத்தியுடையோர்க் கெங்கே? இல்லையே; ஆதலின் வழூ. அணுக்கள்
சையோகத்தை யன்றிப் பூதமென்பதும், பௌதிகமென்பதும், அவற்
றின் புடைபெயர்ச்சிகளும் கண்டிலமே; காணுததால் இப்படியே 'பூ
ழுலகத் தோற்றமெலா மெய்தானு' என்றார். மெய்தானு வென்பதி
லுள்ள ஆகாரம் எதிர்மறைப் பொருளைத் தரவந்த வினு. பூ, நாண்,
கரும்பு, வீரன் இவை யுருவகம். சொல்லென்றது நீ யாராயாமல் யான்
கூறுவதை நம்பற்க வென்பதைக் குறிப்பிக்க நின்றது. பூவாம்,
நாணும், கரும்பாம், வீரனும், ஏற்றுவனு மிந்தமுடிபுகளனைத்தும் உல்
லங்கனஞ் செய்வதுபோலுக்! பொய்யே முழுதுங் கூறுவதனுலென்
பது கருத்து. (௬௭)

(அ - கை.)

மகான்கள் இன்பத் துன்பங்களை யுத்தரிப்பது யாதினுக்கென்றே
வனுற் குத்தரம் இக்கவி கூறுகின்றது.

காலமோ தேவன்தயோ கன்மமோ மாமாயைச்
சீலமோ விம்மனத்தின் செய்கையோ - கோலியகல

லுச்சாக மோகநலந்தீங் குத்தரிப்ப தேததிலே
யெச்சார்பு மில்லா விவர்க்கு.

(இ - ரை.) "காலமோ தேவதையோ கன்மமோ மாமாயைச் சிலமோ விம்மனத்தின் செய்கையோ" எ - து. காலத்திலோ, உபாசனாமூர்த்தத்திலோ, நாமியற்றுஞ் சற்கருமத்திலோ, சிற்சத்தியென்னு நின்மலத்திலோ, சுத்தமான இம்மனத்தின் சேட்டையின்கணனோ, "கோலிய நல்லுச்சாகமோ நலந்தீங் குத்தரிப்பதே ததிலே யெச்சார்பு மில்லா விவர்க்கு" எ - து. நம்மா லியற்றிய சன்மார்க்கத்தின்கண் விளையு முச்சாகத்தினிடத்திலோ ஊழாற் றமே விளையுஞ் சுக துக்க வயப்படாம லுத்தரித்துக்கொண் டிருப்ப திவற்றுள் யாது? அந்நிலைக்கண் ணெவ்வகைச்சார்பு மில்லாமற் சதோதயமாக விளங்கிக்கொண் டிருக்கு மிந்தச் சீவன்முத்தர்களுக்கு—எ - று.

உத்தரித்தல் நிலை கலங்காது சகித்திருத்தலே. இக்கவியிலுள்ள ஆறு ஒகாரமும் உறுதிப்பொருள் தராண்மையின் ஐயம். இங்கே ஏதென்பது அறிவறியாமைக் கிடைநிற்றலே. இங்கே எச்சார்பு மென்றது ஞானஞ்ஞானச் சார்பை. அப்பாற்கடந்து நிற்றலின் மாவெனவும், சிலமெனவுங் கூட்டிக் கூறியதால் மாமாயைச் சிலமோ வென்பதற்குச் சிற்சத்தியென்னு நின்மலத்திலோ வென்றுரைகொண்டாம். வாளா கூறாது இம்மனமெனச் சுட்டியதால் சுத்தமான இம்மனமென் றுரைகொண்டாம். எச்சார்பு மென்பதிலுள்ள வும்மை முற்றும்மை. இவர்க்கென்பது அணிமைச் சுட்டாதலின் சீவன் முத்தரென்றாம். ஞானஞ் ஞானத் திடையிலென்பதுகருத்து. (சுஎ)

(அ - கை.)

இந்நிலைக்கண் சற்றுந் திரும்பாதாரை நோக்கி விசன மூறுதலை இக்கவி கூறுகின்றது.

தன்னைத்தான் றேடாச் சதிகாரரேன்பிறந்தா
ரன்னத்தால் வந்தவுட லார்தாமார் - முன்னம்

விடுத்தவுட லெத்தனையோ மீண்டுமீண் டின்பா
லெடுத்தவுட னூறா யிரம்.

(இ - ரை.) "தன்னைத்தான் றேடாச் சதிகாரரேன்பிறந்தார் ரன்னத்தால் வந்தவுட லார்தாமார்" எ - து. தானாவதினைய நிலையுணர் சுருதி யுத்தி யனுபவத்தாற் றேடித் தன்னைக்காணாது மிருகம்போல் உண்டுறங்கி விவர்த்தத்தில் விவகரிக்கும் பண்டிதபாமரர்களை நோக்கி இந்தச் சதிகாரப் பாவிகள் ஏன் மானிடராய்ப் பிறந்தனர்? இவர்களுக்கு அன்னமயமாக வந்துள்ள தேகமென்பது யார்? இதனில் நின்றியக்குந் தேகியாகிற தாமார்? "முன்னம் விடுத்தவுடல் எத்தனையோ மீண்டு மீண்டின்பா லெடுத்தவுட னூறாயிரம்' எ - து. இவ்வுடல போல முன்னர் விடுத்துள்ள வுடல்கள் எத்தனை கோடிகளோ? அவ்வனம் விடுத்த பின்னா போகம் நுகர்வான்வேண்டி இன்பமாகக்கருதி மீண்டு மீண்டெடுத்த வுடல்களை எத்தனை கோடிகளோ?—எ - று.

பிறவாதிருக்கையே நன்றெனக் குறிப்பிக்க ஏன்பிறந்தார் என்றார் விடுத்தவுடல் எத்தனையோ என்பதனால், எடுத்த உடல் எத்தனையோவென்று உரைகொண்டாம். எண்ணிலடங்காமையின் ஒருவாறு நூறாயிரமென்றார். எத்தனையோ என்புழியுள்ள ஓகாரம் ஐயம். இங்ஙனம் விசாரித்துத் தெளியாவரையும் சனனமரணம் விடாதாதலின், விடுவிப்பான் வேண்டிக் காருண்யத்தாற் கூறியதென்பது கருத்து. துக்கநிவிர்த்தி தடையற்றவானந்தம் தரற்பாலதாகிய நெறியை எத்தனை வேதசாகைகளா லெடுத்துக்கூறினும் அவ்வழி நில்லாதார் மேலெழும் கோபத்தாலாதலின் சதிகாரரென்றார். இருதிணைக்கண்ணும் வருதலின் உடலார் எனப்பட்டது. இந்தப் பிறவி நம்மை விட்டகலுமாதலின் முன்னம் என்பதற்கு இதுபோல் விடுத்தவுடல் என்றும், முன்னரெடுத்த வுடலும் பின்னர் எடுக்கப்புகுமுடலும் பிரத்தியக்ஷமல்லாமையின் இப்போதுவந்தவுடல்கொண்டு குறிப்பாற்கணிக்கப்புகுந்தனர். இங்ஙனம் குறிப்பாற் கணிக்கத் தெளிப்புகுவது கல்வித்

தெளிவாலோ? மூடத்தாலோ? மூடத்தாலெனின், 'ஒன்றொழிபொதுச்சொல் விகாரந் தகுதியாகுபெய ரன்மொழிக் குறிப்பே' என்பது கொண்டு கணித்தற்கியையுமோ? கூடாதெனின், கல்வித் தெளிவாலென்க. (௪௮)

(அ - ௯)

யாவரும் ஆபாசரோ வெனற்கு இக்கவியில் உத்தரங் கூறுகின்றது.

பொய்யாக்கப் பொய்யைப் பொருளைப் பொருளாக்க
மெய்யாக் குருவொருத்தன் வேண்டிற்றே - யையகோ
பூபால ராகிப் பொலிந்திடுசீ வன்களெலா
மாபாச ரென்பதுவே யாம்.

(இ - ரை.) "பொய்யாக்கப் பொய்யைப் பொருளைப் பொருளாக்க மெய்யாக் குருவொருத்தன் வேண்டிற்றே" எ - து. அனைத்து மெய்போலத் தோற்றலின் பொய்யெனத் தெரியாதவைகளைப் பொய்யாக்கி மெய்யெனத் தெரியாததை மெய்யாக்க எவர்க்கும் முக்கியமாக உண்மையான ஞானாசிரியன் ஒருவன் வேண்டுவதன்றோ? "ஐயகோ பூபாலராகிப் பொலிந்திடு சீவன்களெலா மாபாசரென்பதுவேயாம்" எ - து. ஐயையோ! பூமிகளாகின்ற அண்டங்கடோறும் போக நிமித்தந் தனுகரணங்களை இடையூறு வாராது பாதுகாக்க எங்கும் நிறைந்துள்ள சீவாபாசனைவரும் தம்மை யிழந்தவரெனச் சுருதிகள் கூறுவது உண்மையேயாம்—எ - று.

பொய்யைப் பொய்யாக்கலும், பொருளைப் பொருளாக்கலும் மண்ணால் காட்டமின்றிக் கட படத்தை மெய்யாக்கக் கொள்ளுமாறு போன்று, சைதன்ய நாட்டமின்றிப் பிருதிவுதத்துவ முதல் நாததத்துவம் இறுதியாகக்கிடந்த தத்துவக் குழாங்களைத் தனித்தனி மெய்யாக்கொள்வ துயிர்களுக்கியல்பாதலின், அதனை விட்ட விலக்கனை

யால் அனைத்தும் பொய்யாக்கற் கியைதலினாலும், இவற்றை யறியு மறிவு எங்கும் நிற்றலின் ஏனைய விரண்டிலக்கணையால் மெய்யாக்கற் கியைதலினாலும் உய்த்துணர்ந்து தெளியாவிடத்துப் பொருள்படா வென்க. தன்னைத் தானறியாமையினால் யாவரும் ஆபாசரேயென்பது கருத்து. தேகாதிதத்துவங்கள், தத்தங் காரணங்களுக்குக் காரியமென அறியாதுபோதிக்கும் மெய்க்குருவாக் காண்டலின், அவர்களை யொழிக்க மெய்யாக் குருவொருத்தன் வேண்டிற்றேயெனவும், இரீக்கக்கூறி ப்பின் மேலீட்டைக் காட்ட ஐயகோவெனவுங் கூறியவாறு காண்க. சுருதி கூறியது உண்மையேயெனக் காட்ட ஆபாசரென்பதுவேயா மெனப்பட்டது. ஆக்கவாகுமாதலின் பொய்யாக்கவெனவும் பொரு ளாக்கவெனவும் பிறவினை தந்து கூறினார். (சகூ)

(அ - கை.)

இவர்கள் ஆபாசராயினும், சைதன்யம் அவரவர்க் கியைந்தவண்ணம் காணப்படுவானேன் என்றதற்கு உத்தரம் இக்கவியிற் கூறுகின்றது.

ஒன்றிலே தோற்று முலகப் பிரதிவிம்ப
மொன்றுபோற் றோற்றாத வுண்மையென்னே — வென்றும்
பொருளாகப் பாராத புன்மையறி வோர்க்கே
மருளார் பொறிபோல வாம்.

(இ - ரை.) "ஒன்றிலே தோற்று முலகப் பிரதிவிம்ப மொன்று போற்றோற்றாத வுண்மையென்னே" எ-து. ஏக சைதன்னியமாகின்ற வியாபக விளக்கத்தில் ஆடியிற் சாயைபோற் றோற்று மூலகமாகின்ற பிரதிவிம்பமானது அதனது பிம்பம்போல ஏகமாகத் தோன்றாது பல வாகக் காண்டற்கு ஏது என்னைகொலோ? இவ்வளவு தெரி தருள வேண்டுமெனின், "என்றும் பொருளாகப்பாராத புன்மையறிவோர் க்கே மருளார் பொறிபோலவாம்" எ - து. எப்போதும் பொருளல்ல

வற்றை விட்டுப் பொருளைப்பொருளாகப்பாராத அற்பவறிவினருக்கே தெளிவின்றி விளங்கு மையுணர்வு எங்ஙனமோ, அதுபோலப்பற்பல பேதங்களாக க்காணப்படும்-என - று.

இடபேதத்தாலும், விஷயபேதத்தாலும், உணரும் பேதத்தாலும் பற்பலவாகக் காணினும் உணரும் புடைபெயர்ச்சி யறிவினதன்றோ? அப்போது வினைமுத லறிவன்றோ? அவ்வினைமுதலை மாத்திரம் உற்றுணருமிடத்துப் பலவாகக்காணுமோ? ஒன்றாகக்காணுமோ? பலவாக வெனின், வினைமுதல் நாட்டம் அன்றாகவேண்டும். ஆடி நாட்டத்தில் அது பற்பலவாறாகக் காணுவாறுபோன்று அறிவுநாட்டத்தில் அது பற்பலவகைப் பேதமாயினும் அங்ஙனம் பற்பலவாகக்காணுமா? காணாதே. அங்ஙனங் காணுதல் பொருளைப் பொருளாகப் பாராதார்க்காதலின், மருளார் பொறிபோலவாமென்று இவ்வுவமை கூறினாரென்க. சூரியப் பிரதிபிம்பம் பலவாயினுஞ் சூரியனாகின்ற பிம்பம் விளங்கியவிடத்து அவையனைத்தும் பொயப்பட்டு எங்ஙனம் ஏகமாக விளங்குமோ, அது போலச் சைதன்யப் பிரதிபிம்பச் சிதாபாசர்கள் பலவாயினுஞ் சைதன்னியமாகின்ற ஞான சூரியன் உள்ளவாறு விளங்கியவிடத்து அவையனைத்தும் பொய்ப்பட்டு ஏகமாக விளங்குமென்க. ஒன்றிலே யென்பதிலுள்ள ஏகாரம் ஏனையவற்றில் அன்றென விலக்கவந்த விடத்துப் பிரிநிலையெனவும், துணிவுபெறப் பொருடரவந்தவிடத்துத் தேற்றமெனவும் பெயர்பெறுங் கிளையும். கற்பிதவுணர்வு மெய்யுணர்வுபோற் காணினும் அஃதாராய்ந்தெட்ட அறியார் மருள்போலும் ஆகற்கவென்பது கருத்து. என்றோ வென்பதில் ஓகாரம் வினா. அறிவோர்க்கே என்பதில் ஏகாரம் தேற்றம். பழுதை பாம்பாகத்தோற்றியவிடத் தெய்திய பயகம்பாதிகள் பழுதையாகக் கண்டவிடத்தன்றித் தொலையுமோ? அதுபோலச் சைதன்யம் சுசாதியாதியாகத் தோற்றியவிடத் தெய்திய ஐயந் திரிபுகள்சைதன்யமாகக் கண்டவிடத்தன்றித் தொலையாவாமென்க. விரிக்கிற் பெருகும்.

(அ - ௯௧.)

தானே யனைத்துமெனக் காணத்தெரியாது தன்னைத்தான் றேடப் புறப்படல் இதுபோலுமென்று இக்கவி கூறுகின்றது.

தன்னை யறியாமற் றானே தனைத்தேட
லென்ன புதுமையிதை யென்சொல்வேன் - மன்னுலகிற்
றண்ணீரி னின்றுகொண்டு தாகந் தணியார்போ
லெண்ணீர்மற் றேதுரைப்போம் யாம்.

(இ-ள்.) "தன்னையறியாமற் றானே தனைத்தேட லென்ன புதுமை யிதையென்சொல்வேன்" எ-று. பிரத்தியட்சமாகத் தானிருக்கத் தன்னைத் தானுணர வகையறியாமற் றன்னைத்தான் றேடப் பிரவேசித்தல் என்ன ஆச்சரியம்! நாணமின்றி யிதை யெவர்பால் எடுத்துரைப்பேன்! "மன்னுலகிற் றண்ணீரினின்று கொண்டு தாகந் தணியார்போ லெண்ணீர்மற்றே துரைப்போம் யாம்" எ-று. தீர்க்க சொப்பனம்போலென்றும் நிலைபெற்றுள்ளவுலகத்தின்கண் பாற்கடலிற் கழுத்தளவாய் நின்றுகொண்டு தமது தாகத்தைத் தணித்துக்கொள்ள வகையறியார் எங்ஙனமோ, அது ஞானானந்தவடிவமாக யாமிருந்து மன்னிய சுகத்திற்கே நாற்கதிகளினின்று அலைகின்றனமே; இதையேனுஞ் சற்றுணர வகையறியீர்போலும்! இதைவிட யாமெடுத்துக் கூறுவது என்னையுளது! ஐயையோ!—எ-று.

தானல்லாத வுடலைத் தானெனக் கருதில் அது தானாகுமா? அதனால் அயலின்பந் தனதாகுமா? அறிவே தானாகில், அயலின்பமும் வேண்டா; இந்நிலை சற்றும் வாய்த்திலமே. பிறவிதோறும் இங்ஙனமாயின், எங்ஙனம் பிறவிநோயைத் தவிர்குதும்? அதனால் உபசாந்தி நிலை யடைகுதும், தானல்லாத உபாதியுமில்லை, இன்பமுமில்லை, அவற்றிற்கு நயமட்ட வேரிடினுந் தனக்கின்மையின் தானவையுமல்ல. தீதெனல் தனக்கன்னியமன்றாகலின் தன்னைத்தான்றேடுதலினும்

மிக்க வாச்சரியம் எங்குமின்மையின், தன்னையறியாமற் றானேதனைத் தேடல் என்ன புதுமையென்றார். இஃது உபசாரவசனமன்றாகலின் இவ்வுவமை பொருந்துமென்க. அறிவின்மையாலெனபது கருத்து.

(அ-கை.)

இனிச்சும்மா விருத்தற்கியைந்த நெறியை இக்கவி கூறுகின்றது.

சாத்திரங்கள் கத்தித் தலைவீங்குவீர் குலமுங்
கோத்திரமுங் கொண்டுவினை கூட்டுவீர் - சாத்திகரா
யும்மாலே யும்மையுணர்ந் தோயாத் தொழில்விட்டுச்
சும்மா விருக்கொணா தோ.

(இ - ரை.) "சாத்திரங்கள் கத்தித் தலைவீங்குவீர் குலமுங் கோத்திரமுங்கொண்டு வினை கூட்டுவீர்." எ-து. குருத்தனம் விழைந்து அலையும் மானிடர்களே! தமக்குப்பயனொன்றுமின்றி யிருவகைச் சாத்திரங்களையுங் கதறிக்கற்று அதனாற் றலைவீங்கி வியாதியாய்மெலிவீர்கள். இங்ஙனமாய நெறியால் வருந்திப் பொருளீட்டியதனாற் குலமுங் கோத்திரமு மிகச்செய்து அதனாற் பிறவிநோய்க்கியைந்த வினைகளைச் சம்பாதிப்பீர்கள்; "சாத்திகரா யும்மாலே யும்மை யுணர்ந்தோயாத் தொழில்விட்டுச் சும்மாவிருக்கொணாதோ" எ-து சாதகராகப் பல்லூழி காலம் நின்று முயன்று பின்னர்ச் சாத்திகராய் அந்தர்முக திருஷ்டியால், உம்மைக்கொண்டு உமதுண்மைநிலையை யுணர்ந்து மித்தியாத்தியாசமென்னப்படும் அகப் புறச் சேட்டைகள் அனைத்தையும் ஒருங்கே யொழித்து நின்மின். அங்ஙனம் ஒழித்தக்ஷண மெய்தும் அறிவறியாமை நீவிற் சும்மாவிருக்கச்செய்யும்; அங்ஙனஞ் செய்தக்ஷணம் நீங்க ளிருக்கவொண்ணாதோ? இதனினு மேலாயநிலையாது? என் வியர்த்தத்தில் அலைகின்றீர்கள்?—எ-று.

இருவகைச் சாத்திரமாவன:—பிரபலசுருதி, அற்ப சுருதியென்பன. சாத்திகரா என்பதனாற் சாதகதிசையை வருவித்தாம். பிறர்

உணர்த்தினுந் தன்னாலே தன்னை யுணர்ந்த பதின்மனைப்போலவும், உம்மாலே உம்மை யுணரவேண்டுவதாதலின், உம்மாலே உம்மையுணர்ந்தென்றார். இருதகிர்த்தியராதல் ஆங்கியல்பாதலின், 'ஓயாத்தொழில் விட்டேச் சும்மா விருக்கொணாதோ' எனப்பட்டது. உம்மாலே என்பதிலுள்ள ஏகாரம் பிரிநிலையெனினுந் தேற்றமெனினும் பொருந்தும். இருக்கலாமென்னும் பொருளைத்தருதலால், இருக்கொணாதோ என்பதிலுள்ள ஓகாரம் எதிர்மறையெனினும், வினாவெனினும் பொருந்தும். தலைவீங்குதல் கத்துவதாலாதலின் கற்றென்றாதி கத்தியென்றார். (௬௨)

(அ - கை.)

தெய்வமெனல் யாதோவென்ற ஐயத்தை இக்கவி விளக்குகின்றது.

ஆசித்துத் தெய்வத் தடையாள முங்கொளுத்திப்
பூசித்துக் கைகூப்பிப் போற்றுவார் - நேசிக்குந்
தானே வதுவோ சதிரான தெய்வமென
லூனே டுழல்வா ருரூர்.

(இ - ரை.) "ஆசித்துத் தெய்வத் தடையாளமுங் கொளுத்திப் பூசித்துக் கைகூப்பிப் போற்றுவார்" எ-து. யாவரும் மிக்க அன்புகொண்டு தாங்கள் வந்திக்குந் தேவதைகளுக்குரிய ஆலயமுதலியவைகளையும், இன்னும் இவைபோல்வன பிறவற்றையுங் கொண்டல்லாமலுங் கர்ப்பூரம், தீபம், குங்கிலியம், சாம்பிராணி வத்தி முதலியவற்றையுங் கொளுத்தி இவை துணைக்காரணமாக ஆராதித்து இரண்டு கைகளையுங் கூப்பி அஞ்சலிசெய்து வழுத்துவார்கள்; "நேசிக்குந் தானே வதுவோ சதிரான தெய்வமென் லூனேடுழல்வா ருரூர்" எ-து. இங்ஙனம் மிக்க அன்புகொண்டு பூசிக்குந் தானெனப்படுவ

(அ-கை.)

இதுவுமது.

பிச்சை முதலாப் பிரமபத மீறாக
விச்சை வரினு மிசைந்தாலுஞ் - சொச்ச
நலங்காதார் தாமதுவா நாடாதார் சித்தங்
கலங்காதா ரேஞானி காண்.

(இ - ள்.) "பிச்சைமுதலாப் பிரமபத மீறாக விச்சைவரினு மிசைந்தாலும்" எ - து. பிச்சை யெடுத்தன்முதற் பிரமபத மெய்தல் இறுதியாய இவற்றில் இச்சைவரினும், வந்தவண்ணங் கை கூடினும் "சொச்ச நலங்காதார் தாமதுவா நாடாதார் சித்தங் கலங்காதாரே ஞானி காண்" எ - து. தமது ஸ்வயம்பாநுபூதி நிலையி லூறுதிகெடாதவர்கள், தாம் அதுவதுவாக ஆகாதவர்கள், சித்தஞ் சிறிதும் பேதியாதவர்கள் யாவரோ, அவர்களே ஞானிக ளென்னப்படுபவர்கள்—எ - று.

காண் அசை. சிறுமை பெருமையேனும் அதற்குரிய பலப் பிராப்தியேனும் இனையதென அறியாதவர்களாதலின் இவர்களை ஞானிக ளென்றார். இவர்களுக்கு மேலுங்கீழுமாய நிலை: சூரியப் பிரதிபிம்பம் அலைகளான் மேலுங்கீழுமாகக் காண்டல்போலும். வரினும், இசைந்தாலும் என்பவற்றிலுள்ள உம்மை ஐயத்திற்கியைந்த எண்ணும்மை கலங்காதாரே யென்பதிலுள்ள ஏகாரம் மற்றைய ரல்லரெனக் காட்ட நிற்றலின், பிரிநிலையெனினும் அமையும். (அஅ)

(அ-கை )

இதுவுமது

வக்தித் துரைப்பார் வழிபடினும் வன்கூற்றர்
நிந்தித் துரைத்தாலு நெஞ்சுறார் - சிந்தையற்று
மேகாட்டவிவரினும் வெய்யோ னுதித்தாலு
மாகாயம் போல்வா ரவர்.

(இ - ரை) "வந்தித்துரைப்பார் வழிபடினும் வன்கணோர் நிந்தித் துரைத்தாலு நெஞ்சுரார்" எ - து. மிகுந்த வணக்கத்தோடு துதிப்பவர்கள் தொண்டு செய்யினுங் கொடூரமான பாவிகள் மிகவுநிந்தனையாகத் தூஷிக்கினுஞ் சற்றும் மனத்தில் வையார்; "சிந்தையற்று மகாடவிவரினும் வெய்யோ னுதித்தாலு மாகாயம்போல்வா ரவர்" எ-து. சிந்தை யென்பது சிறிதுமின்றிச் சத்த மேகங்களும் ஒருங்கே ஆரணியம்போல் வரினுஞ் சூரியர்கள் ஆரணியம்போல் ஒருங்கே யுதிக்கினும் மகத்தான ஆகாயம்போலப் பேதியாது நிற்பவர்கள் யாவரோ அவர்களே ஞானவான்கள்—எ - று.

இக்கவியிலுள்ள நான்கு உம்மைகளும் எண் ணும்மைகள். யாதொன்றினுந் தனக்கின்மையின் ஆகாயம்போல்வார் அவரென்றார். சிந்தையற்று ஆகாயம்போல்வாரென முடிக்க. கருத்து வெளிப்படை. (அகூ)

(அ௰ைக.)

இது வுமது.

எந்தெந்தப் போக மெதிராகு மவ்வளவுக்
கந்தந்தப் போக மனுசரிப்பார் - பந்தமற்று
நீதித் தனிநிலையே நிற்பர்கிர ணம்பரவு
மாதித்தன் போலே யவர்.

(இ - ரை.) "எந்தெந்தப்போக மெதிராகு மவ்வளவுக் கந்தந்தப் போக மனுசரிப்பார்"எ-து. எந்தெந்தப்போகந் தாமனுபவிக்கநேரிட்டதோ, அந்தந்தவளவிற்கு அந்தந்தப் போகத்தை நுகர வெண்ணுவார்கள்; "பந்தமற்று நீதித்தனிநிலையே நிற்பர் கிரணம் பரவு மாதித்தன் போலே யவர்" எ - து. இருவகைப்பற்றையும் ஒருங்கேயகற்றி நெறிப்படித் தானேதானாகிற நிலையிற் கலக்கமின்றி நிற்பார்கள்; தனது கிரணங்களால் வியாபித்து நிற்கும் சூரியன் எங்ஙனமோ அதுபோல அந்தச்சீவன் முத்தர்கள்—எ - று.

மிஞ்சவுங் குறையவும் போகாவெனற்கு அவ்வளவுக்கெனவும், வலிந்து செல்லாரெனற்கு எதிராகுமெனவும், எழுமெனற்கு எந் தெந்தப் போகமெனவும், அறிவறியாமைக்கு இடைநின்றதாமென ற்குத் தனி நிலையே யெனவும், அதனைச் செல்லுமா றறிந்து செல்ல வேண்டுமாதலின் நீதியெனவும், சமதனுபவமாய நிலைகள் ஏனையவை ப்பற்பலவாயினுந் தனதுகிரணங்கள் பலதிசைக்கண்ணும் பலவாறும் நின்று வீசினுந் தான் அவை யாகாத சூரியனைப்போல் அதன் கிர ணம் பரவும் ஆதித்தன்போலே எனவுங் கூறியவாறு காண்க. பொருண் மையி னிற்றலின் எந்தெந்தப்போகம் அந்தந்தப்போகமென விளைவுஞ் சுட்டும் அவ்வாறாகவந்தமை காண்க. இங்கே போகமெனல் சுகதுக்கங் களை. தனிநிலையே என்பதில் ஏகாரம் தேற்றம்; போலே யென்பதில் ஏகாரம் அசைநிலை. கருத்து வெளிப்படை. (கய)

(அ - கை.)

காமக்குரோதாதிகள் கணப்போதாயினும் இவர்கள் சித்தத்தைக் கலக்குமோவெனற்கு இக்கவியில் உத்தரங் கூறுகின்றது.

சித்துருவ மாகிச் செகசாட்சி தாமான
முத்தரைக்கா மாதி முனியாவே - சித்தத்தி
லிங்கற்ப வாசனைக ளெல்லா மெடுத்தருந்திச்
சங்கற்ப மில்லாத தால்.

(இ - ள்.) "சித்துருவமாகிச் செகசாட்சி தாமான முத்தரைக் காமாதி முனியாவே" எ - து. நிற்பிரகாசவடிவமே தாமாகியும், சகத் திற்குச் சாட்சி தாமாகியும் விளங்குகின்ற சீவன் முத்தர்களைக் காமக் குரோதாதிகள் வதைக்காவாம்; எனெனில் "சித்தத்தி லிங்கற்பவாச னைகளெல்லா மெடுத்தருந்திச் சங்கற்பமில்லாததால்" எ - து. இவர் கள் சமதுசித்தத்திற் பிறவிதாறக்கிடைந்த வாசனைகள் எத்தனை கோடி களோ அவையனைத்தையும் ஒருங்கே யெடுத்துண்டு தான்மாத்திர

மாய் நிற்குமிடத்துச் சங்கற்பமெனல் அவர்கட்கு எது சிறிதுமில்லாத தால்—எ - று.

ஆயுமாகாது உலகந் தாமாக விளங்கலின் நனவு, நினைவு, சுழுத்தி, துரியம், துரியாதீதம், மூர்ச்சை, மரண முதலிய அவத்தைகளும், அவைவற்றிற்குரிய காட்சிகளும், அபிமானங்களும் இவர்களுக்கு எங்ஙன முண்டாம்? இதுபற்றிச் சங்கற்பமில்லாததாலென்றார். முனியாவே என்பதில் ஏகாரம் அசை. அருந்தியெனல் இலக்கணை. சங்கற்பநாசம் எய்தியதாலென்பது கருத்து. (௬௧)

(அ - கை.)

இதுவுமது.

எங்கும் பொதுவா யிருக்குமொரு சீவன்முத்தர்
தங்குமிடந் தானே தலவாச - மங்கவர்கள்
பார்வையே தீர்த்தமவர் பாதார விந்தமலர்ச்
சேவையே சாயுச் சியம்.

(இ - ரை.) "எங்கும் பொதுவா யிருக்கு மொரு சீவன் முத்தர் தங்குமிடந்தானே தலவாசம்" எ-து. எங்கணும் யாவர்க்கும் பொதுவாக விருக்கின்ற ஒப்பற்ற சீவன்முத்தர்கள் இருக்கு மிடம் யாதோ, அதுவே தலவாசமெனப்படுவதாம்; "அங்கவர்கள் பார்வையே தீர்த்தமவர்பாதாரவிந்தமலர்ச் சேவையே சாயுச்சியம்" எ - து. அங்ஙனமிருநின்றுள்ள அந்த மகான்களது திருவ்ஷ்டியே தீர்த்தமாம். அவர்களது திருவடிகளாகிற தாமரைப் புஷ்பங்களைச் சேவிக்குஞ் சேவையே சாயுச்சியபலனும்—எ - று.

இடம் தலவாசம், பார்வை தீர்த்தம், பாதசேவை சாயுச்சியம். இவை மூன்றும் உருவகம். இடந்தானே, பார்வையே, சேவையே என்பதிலுள்ள ஏகாரங்கள் தேற்றம். தலவாசம், தீர்த்தம், சாயுச்சியமென்பன மகான்களைப்பற்றி எய்துமென்பதுகருத்து. (௬௨)

தா, வேறுண்டாயது எனப்படுவதோ உண்மையான தெய்வமெனப் படுவது? இவ்வையந் கடந்த உறுதிநிலையினை உடலளவு தானெக்கண் டுழல்பவர்கள் எங்ஙன மடைவார்கள்? ஒருபோதும் அடையமாட்டார் ள்—எ-று.

• தானெனல் அது அது ஆகார மாகாவிடத்து ஒன்றுங் காணப் படாது; காணப்படுதலின் கேசிக்குந்தானேவெனவும், இவ்வளவு அறி யாத்தார் தானெனலன்று வேறென்பாராதலின் அதுவோ வெனவும், இங்ஙனங் கண்டித்தற் கியைவது தெய்வமாதலின் சதிரான தெய்வ மெனவும் கூறியவாறு காண்க. இவ்வையங் கடந்த நிலையை ஊனே டுழல்வா ருருரெனவே, ஞானமே வடிவாயினு ருறுவரென்பது பெற் றும். ஆசித்து, கொளுத்தி, பூசித்து, கூப்பிப் போற்றுவாரென முடி க்க. தானே, அதுவோ என்பவற்றிலுள்ள ஓகாரங்கள் ஐயம். தெய்வ மெனற்கு வஸ்துசித்தாந்தம் எவரெவர் யாது யாது கூறினுஞ் சுசாதி யாதி பேதமற்ற மெய்யுணர்வாதற் கியையவேண்டும். அன்றேல் துக்க நிவிர்த்தி தடையற்ற ஆனந்தம் வாய்த்தற்கு இடம் பெறுதென்க. வளா தெய்வமென்றது சதிரானதென்று அடைகொடுத்ததால் மெய் யுணர் வென்றும். ஞானாகாரமாய் நிற்றலே தெய்வமென்பது கருத்து.

(அ - கை.)

ஆயின், ஆலயமும் உற்சவமும் யாவை? யான் கருதி ஏற்படுத்தப் பட்டனவோவென்ற ஐயமகற்ற இக்கவியில் உத்தரங் கூறுகின்றது.

தேரைத் திருநாளைச் சேவிப்பார் தம்மைவிட்டங்
காரைத் தொழப்போரு ரையகோ - தேரிடைநிய
பார்க்கின்ற தெய்வம் பரிபூ ரணமலவோ
யார்க்குந் தெரியாத தோ.

(இ - ரை.) "தேரைத் திருநாளைச் சேவிப்பார் தம்மைவிட்டங் காரைத் தொழப்போரு ரையகோ" எ-து. தேரென்றும், திருவிழா வென்றும் எங்கெங்கே வழங்கப்படுவனவோ அங்கங்கே அவ்வவற்றிற்

சூரியார் சென்று சேவிக்கப் புகுவார்கள். இவர்கள் தத்தம் எதார்த்த நிலையைக்காண வகையறியாது தம்மை விட்டு விட்டு அங்கு ஆரைத் தொழப்போகின்றனரோ? இஃதென்ன மடமை! "ஐயகோ நேரிடையே பார்க்கின்ற தெய்வம் பரிபூரணமலவோ யார்க்குந்தெரியாததோ" எ-று. தம்மைத் தாம் உணராமற்போயிடினும் இரதத்தின்மேல் எழுந்தருளிச்செய்ததாகக் கேள்வியுற்று யாம் பார்க்கப்போன தெய்வமும் பரிபூரணமான நிலையினதன்றோ? இம்மகிமை யாவருக்குந் தெரியாததோ? இதனையேனும் உணராததென்னேகொலோ!—எ-று.

ஒன்றின முடித்தல், தன்னின முடித்தல்என்னும் உத்தியால் தேர் திருவிழா வென்பவற்றிற்கு இனமாயுள்ளவை பல வுள; அவற்றிற் சில வருமாறு:— அருவத்தியானம், மானத பூசை, ஆருடாரம், தெய்வவுருத் தியானித்தல், அருவுருவைத் தியானித்தல், இவ்விரண்டு மின்றித் தியானித்தல், மெய்யுணர்வு தானாகத் தியானித்தல் இவை போல்வனபிறவுமாமென்க. சேவிப்பார் தொழப்போமூரெனமுடிக்க. ஐயகோவென்பது இரக்கக்குறிப்பு. போகிறூரென்பது போமூரென் றுயது இடைக்குறை. நேரிடையே என்பதில் ஏகாரம் அசை. பரிபூரணமலவோ, தெரியாததோ வென்பவற்றிலுள்ள ஓகாரங்கள் வினா. தெய்வமெனலுந் தானெனலும் மெய்யுணர்வையின்றி யின்மையின் இவற்றுள் ஒன்றைத் தெளியினும் போதுமென்பது கருத்து. தெய்வ மெனற்கு அருத்தம் ஏகதேசமெனப் பாமரருங் கொள்ளுவரோ என்பதைக் குறிப்பிக்க யார்க்குந் தெரியாததோவென்றார். தன்னைத்தான் காண முக்கியமாக ஏற்படுத்தப்பட்டது என்று கொள்ளினும் அமையும்; புறம்பிற் காட்டிப் பின்னர் அகத்திற் காட்டவேண்டும் என்பதோர் தந்திரமாதலினென்க. யார்க்கு மென்பதிலுள்ள உம்மை முற் றும்மை. அல்லவோவென்பது அலவோவென்றுயது விகாரம்.—(நூச)

(அ - கை.)

கிரியாயோகம், ஞானயோகம் என்பவற்றுள் ஞானயோகமே சிறந்ததென இக்கவி கூறுகின்றது.

மூலக்கு ளேயிருந்து மூச்சடக்கிப் பேச்சடக்கிச்
சாலக் கனயோகஞ் சாதிப்பார் - மேலுணர்வு
கண்டிருக்கச் சாதனையேன் காயத்தை யேவலித்திங்
குண்டிருக்க வெண்ணுகிறீ ரோ.

(இ - ரை.) "மூலக்குளே யிருந்து மூச்சடக்கிப் பேச்சடக்கிச் சாலக் கனயோகஞ்சாதிப்பார்" எ-து. சித்தம் பேதியாதிருக்கவேண்டி மூலவீட்டறைக்குள்ளே இருந்து பிராணவாயுவைப் பந்தனம் பண்ணி மௌனமாக நின்று மிகவும் பெரிதான கிரியாயோகத்தைப் பல்லூழி கால் நின்று சாதிப்பார்கள்; "மேலுணர்வு கண்டிருக்கச் சாதனையேன் காயத்தையே வலித் திங்குண்டிருக்க வெண்ணுகிறீரோ" எ-து. எவற்றிற்கு மேலாய மெய்யுணர்வு யாதோ அதனை யுள்ளவாறு கண்டு அஃதிருந்தவண்ணம் இருத்தற்குச் சாதனைசெய்தல் எற்றிற்கு? இதனை விட்டு மணி மந்திர அவிழ்தங்களாற் காய சித்தி யொன்றையே உறுதியாகப் பெற்று இவ்வுலகின்கண் பல்லூழி காலஞ் செவ்வையாக உண்டிருக்கும்படி எண்ணங்கொள்ளுகிறீர்களோ?—எ-று.

பூமிக்குள்ளும், பாழ் அறைக்குள்ளும் அன்றி மூச்சடக்கலும், பேச்சடக்கலுங்கூடாமையின் 'சாலக்கனயோகஞ் சாதிப்பார்' எனவும், எவற்றிலுங் கூடியுங் கூடாதிருக்குஞ் சிதாகாயத்தைக்கண்டு, அஃதிருந்த வண்ணஞ் சலட்சணவிலட்சணமாய் நிற்றற்குச் சாதனம் வேண்டுவதே இல்லையென்பார் 'மேலுணர்வு கண்டிருக்கச் சாதனையேன்' எனவும், காயசித்திபெறல் தேகபோக அவாவிற்கே என்பார் 'காயத்தையே வலித்திங்குண்டிருக்க எண்ணுகிறீரோ' எனவுங் கூறியவாறு காண்க. சிதாகாயத்தையன்றிச் சிதாபாசன் எங்ஙன மில்லையோ, அதுபோலப் பஞ்ச பூதத்தையன்றி இத்தூல தேகமாகிய பௌதிகம் எங்ஙன மிருக்கும் என்பதனாலும், ஆகாயத்தில் எறிந்த கல் பூமியில் விழுந்தே தீரு மென்பதனாலும் இக்காயசித்தியாற் பயனின்றெனக்குறிக்க வெண்ணுகிறீரோவென உல்லங்கனஞ் செய்ததாகக் கண்டாம். ஆதிமத்தியாந்த

நகிதமாயது சிதாகாயமேயன்றி ஏனையவற்றிற்கு அந்த யோக்கியதை சற்றுமின்மையின் ஞானயோகமே சிறப்புற்றதென்பது கருத்து. காலத்தையே என்பதில் ஏகாரந் தேற்றம். எண்ணுகிறாரோ என்பதிலுள்ள ஓகாரம் எண்ணாதிருத்தலே மிக்க நலமெனக் குறித்தலின் எதிர்மறை.

(அ - கை.)

இவற்றுள் ஒன்றை எய்தற்குத் துறவு தக்கதன்றோ என்ற வினாவிற்கு விடை இக்கவியில் கூறுகின்றது.

கட்டப் படாமற் கரபாத் திரந்தரிப்பார்
மட்டித் தொருகோ வணராவார் - சிட்டர்போற்
றூங்காமற் றூங்குஞ் சுகமும் பெறுவாரே
யாங்கார நீங்குவரா னால்.

(இ-ரை.) "கட்டப்படாமற் கரபாத்திரந் தரிப்பார் மட்டித் தொருகோவண ராவர்" எ-து. பட்டி மாட்டைக் கட்ட வகையறியார்போல் மனதை அடக்க வகையறியாது பிச்சையெடுத்துண்பான்வேண்டிக் கரபாத்திரத்தைக் கையிலேற்றுத் திரிவார்கள்; மட்டித்தனமான வொரு கோவணத்தைத் தரித்துக்கொண் டிருப்பார்கள்; "சிட்டர்போற் றூங்காமற்றூங்குஞ் சுகமும்பெறுவாரே யாங்காரநீங்குவரானால்" எ-து. எவர்க்கும் இனியராயிருக்கின்ற மகான்களைப்போல நனவிற் சுழுத்திநிலை பெற்றுத் தானலாததைத் தானெனக்கொள்ளும் அகங்காரமும் நீங்கப்பெறுவாராயின், தப்பாமற் பேரின்ப நிலையையும் அடைவார்கள் — எ-று.

தனது பரிபூரணநிலை சலனமுறுவதுபோலக் காண்டலே மனமெனக்கணிக்க வகையறியாதார் இவையனைத்துஞ் செய்தும் யாது பயன்? இவற்றோடு யானெனதென்னுஞ் செருக்கறுக்கில் நனவிற் சுழுத்திநிலையும் பேரின்பவாழ்வுந் தடையின்றி யெய்துமென்பது கருத்து. தக்கதாயினும் அவ்வளவில் நிற்பார்போல் நில்லாது தமதுண்மை

நிலைபெறுவதே சிறப்பென்க. சுகமும் என்பதில் உம்மை இறந்தது தழீஇயவெச்சம். பெறுவாரே யென்பதில் ஏகாரம் ஈற்றசை. (ருசு)

(அ - கைக.)

அனுபவத்தைக் காட்டினுஞ் சாத்திரமுஞ் சாதனமுஞ் சிறந்தனவென்றனவல இக்கவி கூறுகின்றது.

எச்சாத் திரம்வேண்டு மெச்சா தனைவேண்டும்
பிச்சாட்டல் லோகெடுவாய் பேதையர்க்குப் - புச்சாண்டி
காட்டுவார் போலவறுங் கற்பனையே காட்டியுல
காட்டுவார் தம்மைக்கா ணார்.

(இ - ரை.) "எச்சாத்திரம்வேண்டு மெச்சாதனைவேண்டும் பிச்சாட்டல்லோகெடுவாய்" எ-து. தம்மைத்தா முள்ளவாறு காணமுயல்வார்க்கு யாது சாத்திரம்வேண்டுவது? யாது சாதனம் வேண்டுவது? இவ்வினைத்தையுங் கருதி முயல்வது பயித்தியமேலீட்டா லன்றோ? மகனுக்கனே! இதனைச்செய்யற்க, செய்யிற் கெடுவை; "பேதையர்க்குப் புச்சாண்டி காட்டுவார்போல வறுங் கற்பனையே காட்டி யுல காட்டுவார் தம்மைக்காணார்" எ-து. அறிவீனச் சிறுவர்க்கு அவர் நடுங்கப் புச்சாண்டி காட்டுவாரெங்ஙனமோ, அதுபோல விவர்த்தமான சன்ம காண்டம் பத்திகாண்டமென்னுங் கற்பனைக்கதைகளையே மெய்யென் றபிநயித்துக் காட்டி யுலகின்கண் மக்களுயிரைத் தமது வயப்படுத்தி யாட்டுவோர்கள்; இவர்கள் யாரெனில் தம்மைத்தா முள்ளவாறு காண வகையறியாத பேதையர்கள்—எ-று.

பிச்சாட்டல்லோ வென்பதிலுள்ள ஓகாரம் விறு. புச்சாண்டி காட்டல் சிறுவர் நடுங்கற்கன்றேல் சமயபோதகர் தம்போல்பவர்க்குப் போதித்தல் அவர்கள் நடுங்கற் கன்றாம். சாதாரண தர்மம் அனுமந் திருத்தலின் இவ்வுவமானம்பொருந்தும். புண்ணில் ஈ மொய்க்குமாறு பேர்ன்று வறுங்கதையில் புல்லியர் வீழ்வார்கள். இவர்களிருப்பதுபற்றி

ப்போதிக்கப் புகுந்தனர். வாங்குவார் இன்றேல் புலால் விற்கப்புகுவ தியாதிற்கு? இவை யனைத்துந் தன்னைத்தா னாக்குமா? ஆங்காவிடத்து அயலை யின்பமெனக்கருதலைப் போக்குமா? தேகமுதலியதத்துவங்கள் தேகியாகுமா? தேகியெனக்கருதார் யார்? இல்லையே. வறுங்கற்பனையே யெனற்கு வழுவென்னை? ஆதலின் இங்ஙனங் கூறினரென்க. அல்ல வோவெனற்பாலது அல்லோவென்றாயது விகாரம். சற்பனையேயென் பதில் எசாரம் தேற்றம். இனித் தன்னைத்தான் காட்டவல்ல ஆசிரிய னைத் தேடுகவென்பது கருத்து. (௫எ)

(அ - கை.)

உள்ளது ஒன்றோ டலவோவெனத் தோன்றும் ஐயமறுக்க இக் கவியில் உறுதி கூறுகின்றது.

ஆண்பெண் ணலியென் றனேக விதமாகக்
காண்பனவு மொன்றாகக் காண்பதுவு - மாண்புடைய
சித்தினது தோற்றமலா லுண்டோ விவைதெளியா
ரெத்தனைசா தித்தாலு மென்,

(இ - ரை.) "ஆண்பெண் ணலியென் றனேகவிதமாகக் காண்ப னவுமொன்றாகக்காண்பதுவும் எ-து. எவர்க்கும் ஆணெனவும்பெண் ணெனவும் இவ்விரண்டுமல்லாத பேடியெனவும் இன்னுழிவைபோன் றனேகவிதமாகக்காணப்படுவனவும் இங்ஙனமாகாதொன்றாகக்காணப் படுவதுவும் வேறல்ல; "மாண்புடைய சித்தினது தோற்றமலா லுண் டோ விவைதெளியா ரெத்தனை சாதித்தாலுமென்"எ-து. மிகவுஞ்சிறந் துள்ள மெய்யுணர்வு மன்று அஃதிங்ஙனமாகத்தோற்றுந் தோற்றமே யன்றி யதனையலதி யிவைவேறுளவோ? உளவாக இவற்றைக்கண்டு தெளியார்தார் எத்தனைவிதங்களாலே ஒன்றெனப் டலவெனப் பல்லூழி காலஞ் சாதிக்கினும் யாதுபயன்? இல்லை.—ஏ-று.

இங்ஙனங் கணிப்பானைக்கண்டு கணிக்கத் தெரியாவிடத்து ஒன்றெனலும் பலவெனலும் வியர்த்தமென்பது கருத்து. தானஞ்ஞானமாநின்றுழிப் பலவெனவும் அன்மெய்யுணர்வா நின்றுழி ஏகமெனவுங் கோடற்கியையுமன்றி யிவ்விரண்டிடத்துந் தானெனவிருத்தலின் இவ்விரண்டுகொள்கையுந் தானல்லவென்ப தருத்தாபத்தியாற் பெற்றாம். ஒவ்வொரு தோற்றமும் பற்பல விகற்ப ரூபமாகத் தோற்றலின் சகலம்போல் அனேகவிதமாகக் காண்பனவும் கேவலம்போல் ஒன்றாகக் காண்பதுவு மென்றார். மாண்புடையவென் றடைகொடுத்தது: அறிவறியாமை யடுக்குகட்கியையாமைபற்றி யென்க. பொருள்படற் கியையாமையின் சித்திலது தோற்றமெனப்பட்டது. உண்டோவென்பதிலுள்ள ஒகாரம் இல்லையென்னும் பொருள்தரலால் எதிர்மறை. எத்தனை சாதித்தாலு மென் என்றது: எவறறிற்கும் வினைமுதலாநிற்பது யாதோ அதனைக்கண்டு சாதி எனக்குறிப்பித்தற்கு. (௫௮)

(அ - ௯௧)

இங்ஙனம் எவ்வாறு விசாரித்துத் தெளியினும் அவவாறு நிற்கவேண்டுமென்பதை இக்கவி கூறுகின்றது.

எவ்வா றெவரிருந்தே னெவ்வா றெவர்போயென்
றெவ்வாற்கூட் டிற்றனிமை யொத்ததே - யெவ்விதமு
நீங்குவார் நீங்கா நிலையிலனு பூதிகண்டு
தூங்குவார்க் கன்றோ சுகம்.

(இ-ரை) "எவ்வா றெவரிருந்தே னெவ்வா றெவர்போயென் றெவ்வாற்கூட் டிற்றனிமை யொத்ததே" ஈ-து எவ்வண்ணம் எவரிருக்கினும் எவ்வண்ணம் எவர்மாறினும் அதனை விசாரிப்பதால் எமக்கு யாதுபயனுளது: வெளவாற் பறவையானது தனது கூட்டில் யாதோர் சார்பின்றித் தனித்திருந்தா லெங்ஙனமோ அதனையொக்குமெனக்கூறுவார்போன்று, "எவ்விதமுநீங்குவார் நீங்காநிலையிலனுபூதி கண்டு தூங்குவார்க்கன்றோ சுகம்" எ-து. எவ்விதச்சார்புகளினின்றும்

நமக்கின்றி யொருங்கொழித்தவராய் இடையினீங்காத நடுநிலையின் கண்விளையும் அனுபூதிரசங்களைக்கண்டு தூங்காமற்றூங்குபவர் யாரோ அவர்களுக்கன்றோ சுகமெனப்படுவது? — என - று.

எவரைச்சுறித்து யாது விசாரிக்கினுந் தன்னிலையிலிருந்துதானே தீரவேண்டியது. அப்போர்தன்றோ சுகமெனப்படுவ தயலினதன்றெனக் கணித்தற் கியையும்? வினைமுற்றே வினையெச்சமாகு மென்றதனால், நீங்குவா ரென்பதனை வினையெச்சமாக்கினும். ஒவ்வாவென்ப திக்காலத்தில் வெளவாலென்றுயது. "பழையன கழிதலும் புதியன புகுதலும்" என்னும் இலக்கணத்தா லென்க. யாதோர் விசாரணையு மின்றித் தனித்திருத்தல்பற்றி வெளவாலை யுவமை யாக்கிய தென்க. எவ்விதமு மென்பதிலுள்ள வும்மை முற்றும்மை. தூங்குவார்க்கன்றோ வென்பதில் ஓகாரம் ஏனையர்க் கன்றெனக் குறித்தலா லெதிர்மறை. தனதுண்மை நிலையில் நிற்பவர்க்கல்லவோ சுகமெனப்படுவ தென்பது கருத்து?		(ருகூ)

(அ - கை)

துவிதம், அத்துவித மென்பவற்றின் உண்மை நிலை இஃதென இக்கவி கூறுகின்றது.

விண்ணுருவ மீசனென்பார் வேற்றுருவஞ் சீவனென்பார்
கண்ணு மிரவியும்போற் காணென்பார் - திண்ணமதா
மத்துவித மாகா தவையிரண்டு மாகாது
சித்துருவந் தானே சிவம்.

(இ - ரை) "விண்ணுருவ மீசனென்பார் வேற்றுருவஞ் சீவனென்பார் கண்ணு மிரவியும்போற் காணென்பார்" எ-து. பட்டிவடிவ மிஃதெனவும், வியட்டிவடிவ மிஃதெனவுங் குறிப்பிக்க விண்ணுருவம் போல்வது ஈசனெனவும் அணுவடிவம்போல்வது சீவனெனவும் பேதவாதிகள் கூறுநிற்பர். இஃதன்றியுங் கிஞ்சிக்ஞத்துவமிலையதெனவுஞ் ... யிலையதெனவுங்காட்டக் கண்ணொளிபோலவுஞ் சூரிய

வொளிபோலவும் நிற்குமென்றவர்களே வாதியாநிற்பர்; "திண்ணமதா யத்துவிதமாகா தலைவயிரண்டொகாத சித்துருவந் தானேசிவம்" எ-து. இங்ஙனம் வாதிப்பனவனைத்தும் அத்துவிதமெனற்கு மூரணாகவே நிற்கும். அவர்களால் வாதிக்கப்படும் உபாதிபேதங்களும் குணபேதங்களும் ஆகிய விவையிரண்டுமொகாது ஆங்காங்கே விளங்கிநிற்கும் மெய்யுணர்வெனப்படுவதியாதோ, அதுவே தானாகநிலைத்து நிற்றலே சிவமெனப்படுவதாம்—எ-று.

போலென்பதனை யுபாதிக்குங்கூட்டுக. அளவுபடாமையும் அளவுபடுவதும்பற்றித் தாஷ்டாந்தம் இருத்தலின் இந்நான்கையுந் திருஷ்டாந்தமாகக் கூறினார், சாதாரண தர்ம மிருத்தலினென்க. இத்துவித வாதம் பூர்வபட்சமாதற்கே முழுது மியைந்து நிற்றலை யறியாதார்க்கு இது சத்தியம்போற் காண்டலின் திண்ணமதா யத்துவிதமாகாதென்றார். எனவே, அந்தர்முக நாட்டத்தார்க்காகுமெனவாயிற்று. ஆகவே, பிம்பப்பிரதிபிம்போபாதி யிலக்கணத்தால், காண்பான் யாதுயாதாநிற்கின்றானோ, அது வதுவா அவனுக்குக் காண்டல் நூதனமன்றாமையானும், தன்னைத்தவிர விவை சற்றுமின்றாமையானும், இவவிரண்டிடத்தும் நிற்கு மறிவு இத்தகைய தாதலினானும் இவை யிரண்டு மாகாத சித்துருவமெனக் கூறியதாகக்கண்டாம். சீவனெனலும் ஈசனெனலுமறிவின்றோ? அன்றேல், உபாதிகுணந்தொழிலாகட்டும். ஆகுமெனில், தன்னைத்தான் அறிதற்பாலவாகவேண்டும். மூரணுமெனின், அறிவெனலையேயேற்கவேண்டும். உபாதிகுணந் தொழிலின் சிறுமை பெருமை பற்றி அவற்றிற்கு அதிஷ்டானமா நிற்கும் அறிவும் சிறுமை பெருமையெனற் கியையுமா? சலம் சிறுமை பெருமைக் கியையாதலின் அதுபோலச் சிற்றறிவுபேரறிவு என்னற்க. என்னின், சிற்றின்பம் பேரின்பமெனவரும்; வரின் சடசித்துபேத முன்போல அதுலாதுநிற்கும். நிற்கின், சுக துக்கபேதமும் சனனமரண வாதனையும் தன்னைவிட்டகலாமலே நிற்குமென் றுணர்க. ஆதலின், அத்துவிதமே சிறந்த தெனுபது கருத்து; தானேதானாதற் கியைதலினென்க. (௭0)

(அ - கை)

அனைத்து மாயாமயமெனக்கண்டொழிப் புரிவதியாதென்றற்குவிடை இக்கவியில் கூறுகின்றது.

சுத்த சடமான சுக்கிலங்கொர்ப் பீகரித்துச்
சித்தத் துவங்கலந்து சீவித்துச் - சத்தியம்போல்
வந்தபொழு திதெல்லா மாயையென்றே தற்சொரூபஞ்
சிந்தைசெய்வா ரன்றோ சிவம்.

(இ - ரை.) "சுத்த சடமான சுக்கிலங்கொர்ப்பீகரித்துச் சித்தத்துவங்கலந்து சீவித்து" எ-து. தன்னையேனும் அயலையேனும் அறிதலில் சுத்தசடமாய் நின்றுள்ள சுக்கில சோணிதமே கருவாகப் பரிணமித்து அறிவின் ஸ்புரிப்பு எண்ணிறந்தவைகளுள் சிதாபாசத்துவமாகிற சித்தத்துவச்சாயை யதிற்பட்டதாகக் கலந்து இவ்விரண்டின் ஒற்றுமை நயத்தால் ஒன்றுபோற்சீவித்த; "சத்தியம்போல் வந்தபொழுதிதெல்லா மாயையென்றே தற்சொரூபஞ் சிந்தைசெய்வா ரன்றோ சிவம்" எ-து. இவ்வுலகின்கண் வந்துதித்துச் சற்றுவிவேகமெய்திய விடத்து முன்னர்ச் சத்தியம்போல் காணப்பட்ட இப்பூத பௌதிக மனைத்துந் தனது பிராந்தி ரூபமாகக் காணப்படுதலின், மாயாவடிவமென்றே துணிந்து இங்ஙனங் கணித்த தனது சொரூபமாவ தியாதோவெனச் சிரவண மனனாதிகளால் ஐயந்திரிபறத்தெளிந்து, அதுவாயினு ரியாவரோ அவரே சிவமெனப்படுவர் — எ-று.

இங்ஙனங்கணிக்க வலியுளது மானிடப்பிறவியன்றியேனையவை மிசிரகன்மமன்றாமையானும் மிசிரகன்மமாயினும் சாத்வீககுணம்மேலிட்டாலன்றி இந்நிலை எய்தற்கியைந்த பருவமண்மைத்தாகா தாதலினும் இவ்வாறுரைகொள்ள இக்கவியெமக்கியைந்ததெனக்க. மிசிரகன்ம மானிடருக்கெனவே, புண்ணியகன்மதேவர்க்கும் பாவகன்மமனைய வுயிர்களுக்குமென உரைகொளக்கிடந்தமை காண்க. வாளாசடமென்

ணுமையால் தன்னையும் அயலையும் அறியவல்லதன்றென உரைகொண்டாம். தானே தானாதற்கு முயலவேண்டுமென்பது கருத்து. சுக்கிலம், கெர்ப்பீகரித்து, சீவித்துவரீத பொருளென முடிக்க. சிந்தை செய்வார் சிவமெனலை எழுவாய் பயனிலையாக்குக. சுக்கிலம், அகர்த்தத்துவம், அசேதனத்துவமாதலின் கெர்ப்பீசரித்தலும், சீவித்தலும், பூமியிலுதித்தலும் ஏலாதேயெனச் சங்கைகொண்டு அவலமாப் போவதை விட்டு இருப்பது அறிவும் உலகமுமாதலின் இவற்றைத் தீரவிசாரித்து ஐயந்திரிபறத் தெளியின் அக்கணமே துக்கநிவிர்த்தியும் தடையற்ற ஆநந்தமும் இம்மையிற்றானே பிரத்தியட்சமாக எய்துமென்பது துணிபெனக் கொள்க. அவலமாப்போவதாவது:—நிமித்தகாரண னொருவனுளனாகத் தேடப்புகின், தேடுவானையன்றி இன்மையின் முன்னிலையும் படர்க்கையும் அநர்த்தரூபமாக அமைதலையென்க. திரிசயரூபம் அனைத்தும் மாயையெனவே அதனை யறியும் ஆத்மஸ்வரூபந் தன்னைவிட வேறின்மையின் தானே உண்மை வடிவமெனப்பெற்றாம். மாயையென்றேயென்பதில் ஏகாரம் தேற்றம். சிந்தை செய்வாரன்றோ வென்பதில் ஓகாரம் வினையீராகாரெனக் குறிக்க நிற்றலின் எதிர்மறை. (சுக)

(அ - கை.)

திரிகாலஞானம் மெய்யுணர்வெனப்படாதோ எனற்கு இக்கவியில் உத்தரங் கூறுகின்றது.

நேற்றின்று நாளையென நிச்சயித்த ராப்பகலை
மாற்றிசுயஞ் சோதி வடிவாகி - யேற்றபடி
யென்றுமொரு நாளா யிருக்குந் திருநாளைச்
சென்றுதொழு வாரே சிவம்.

(இ-ரை.) "நேற்றின்று நாளையென நிச்சயித்த ராப்பகலை மாற்றி சுயஞ் சோதி வடிவாகி" எ - து. நேற்றெனவும், இன்றெனவும், நாளையெனவும் நிச்சயித்தற்கியைந்த இரவையும் பகலையும் அறிவ

ஏன்றி யிவை யோர் முதலாகாவெனக் கழற்றி, அறிவாகிற நாட்டம் பெற்றதனை ஞானசிரியனூற் சுயஞ்சோதியாகக்கண்டது தானுசப் பல் யூழிகாலம்பயின்று அங்ஙனமாகச் சாத்தியபதிசையடைந்து, "ஏற்றபடி யென்றும் ஒருநாளாவிருக்குந் திருநாளைச்சென்றுதொழுவாரே சிவம்" எ-து. அங்ஙனம் இயைந்த வண்ணம் எப்போதும் ஒருநாளாக இருக்க க்தகுவது எந்நாளோ, அதுவே திருநாளாகக்கருதி அதனை அப்பாலு க்கப்பாலாகச்சென்று தொழுபவர் யாவரோ, அவரே சிவமெனப்படுவ ராவர்—என்று.

தனதறிவே இராப் பகலாகப் பிரதிபலித்துக் காண்டலேயன்றித் தவிக்கன்னியம் அன்றெனஅசமுகப்படுத்துவான்வேண்டிப் புறம்பாக க்கூறியதை மறுத்து இராப்பகலைமாற்றிச் சுயஞ்சோதிவடிவாகியென் றார். சுயஞ்சோதி நிலையைத் தனக்கியல்பாக உடையது அறிவாகலின் மீண்டுஞ் சுயஞ்சோதி வடிவாகி யென்றார். ஆங்கு இராப்பகல் இன் மையினென்று ஒருநாளாவிருக்குந் திருநாளெனப்பட்டது. ஏற்றபடி யென்ற மிகையால் அஃதிருந்தவண்ண மெனப்பட்டது. மாற்றி, வடி வாகி, தொழுவாரென முடிக்க. தொழுவாரே என்பதிலுள்ள ஏகாரந் தேற்றம். இராப்பகலெனின் தளைதட்டுமாகலின் ஆரியமொழிப்படியே ராப்பகலென்றார். தன்னைத்தா னுணரற்பாலதன்றாகலின் அதுவுந் திரிசயமென்பதே கருத்து. (௬௨)

(அ - கை.)

தானே தானுதற்கியைந்ததை முடலாவிடத்து யாதும் பயனின் றென்பதைஇக்கவி கூறுகின்றது.

ஞானநூல் கற்றாலு நற்றுறவு பூண்டாலு
மோன சமாதி முயன்றாலுந் - தானுகி
யெல்லாக் கவலையுமற் றின்புற் றிருப்பதுவே
சால்லாரு முத்திச் சுகம்.

(மு - ரை.) "ஞானநூல் கற்றாலும் நற்றுறவுபூண்டாலும் மௌன சமாதி முயன்றாலும்" எ-து. பிரபல சுருதியாகிய ஞானநூலனைத்தை யும் ஒருங்கே நிரக்கற்கினும் அரிய கடுந்துறவைப் பெறினும் மௌன மாதற்கியைந்த சமாதி யாதோ, அதனை முயன்று நிற்கினும் "தானாகி யெல்லாக்கவலையுமற்றின்புற்றிருப்பதுவேசொல்லாரும் முத்திச்சுகம்" எ-து. இவற்றால் யாதுபயனும் இன்மையின் சமஸ்தமுந் தனது சிற் பிரகாச வடிவமாகியதினா லெல்லாக்கவலைகளையும் ஒழித்துச் சுகபோத வடிவமாநிற்றலே முடிவாகக்கூறும் சொல்லிற்கியைந்த முத்திச் சுக மெனப்படுவதாம்—எ-று.

சமஸ்தமுந் தானாகி யிருத்தல் இப்போது மாத்திர மன்று, எப் போதுமெனலை யறியவேண்டின், இப்போது உதயமான ஞானப்பிர காசம் எப்போதும் விளங்கிநிற்கின் எப்போதுந் தெரியலாம். அஃதெங் ஙனமெனின் தன்னையன்றி அறிவும், அறிவையன்றி யறியாமையும், அறியாமையையன்றி மூலப்பிரகிருதி, மகதத்துவம், அகங்கார தத்து வம், பஞ்சதன்மாத்திரை, சூக்குமதனு, தூலபூதம், தூலதனு இவைக ளும் இருக்கவேண்டும்; இருக்கின், தத்துவங்களை ஒன்றிலொன்றொடு க்கிச் செல்லுங்கால் தானேதானாக முடியாதிருக்கவேண்டும்; அங்ஙன மின்றே. அனைத்துந் தனது விரிவுங் குவிவுமா முடிதலினென்க. யாம் முற்றுமுணரார்த குற்றமன்றி வேறில்லையென்க. இவையனைத்தையும் புரியவேண்டாமென்பதன்று. முடிபுகாண்டற்காதலின், அஃதின்றிய விடத்துப் பயனின்றென்பது கருத்து. இருப்பதுவே யென்பதில் ஏகா ரம் தேற்றம். கற்றாலும், பூண்டாலும், முயன்றாலு மென்பவற்றிலுள்ள வும்மை பயனின்றென்பதைக் குறிக்கவந்த எண்ணும்மையாம். (சுங)

(அ - கை.)

இதுவுமது.

மாகேள்வி பெற்றாலு மாயோக முற்றாலுந்
தேகேந் திரியந் திரிந்தாலு - மாகருணைச்

சோரா ருபசாந்தி தேறார் பெறார்பேறு
சோராத முத்திச் சுகம்.

(இ - ரை) "மாகேள்வி பெற்றாலும் மாயோக முற்றாலுந் தே கேந்திரியந் திரிந்தாலும்" எ-து. யுத்திக்கு முரணாத சுருதிகேள்வி நன்கமையப்பெறினும் மகத்தாப கிரியாயோகம் வழுவின்றித்திரி முற்றப் பெறினும் தேகமும் அகக்கரண புறக்கரணங்களும் முன்போலத் தம திஷ்டப்படிசெல்லாதுஅசமுகமாகத்திரிந்து நிற்கினும் மெய்யுணர்வை யுள்ளவாறு பெறாவிடத்து, "மாசருணைச் சோராருபசாந்தி தேறார்பெறார்பேறுசோராதமுத்திச்சுகம்" எ-து மகத்தான கிருபாவெள்ளத்தில் எங்ஙனஞ்சேர்வர்? சேராவிடத்து உபசாந்த நிலையிலழுந்தி எங்ஙனந் தேறுவர்? தேறாவிடத்தொன்றாலுஞ் சோர்வுறாது நின்றுள்ள முத்திச் சுகமாகிற பேற்றை எங்ஙனம் பெறுவர்?—எ-று.

சேரார், தேறார், பெறார் என்பன உயர்திணைப் பலர்பால் படர்க்கை எதிர்மறை வினைமுற்றுகள். இவற்றினும் மிக்கதின்றெனக்காட்டமா வெனவே மூன்றிடத்துத் தந்தனர். அகமுகத்திற்கும் பகிர்முகத்திற்கும் இயைதலின் திரிந்தாலுமெனப் பொதுப்படக்கூறினர். கருத்து வெளிப்படை. (சுசு)

(அ - கை.)

சித்தங்கலங்காது நிற்கும் முறைமையினை இக்கவி கூறுகின்றது.

இச்சை யநிச்சை பரவிச்சை யோடுழலுங்
கொச்சைப் பிராரத்வக் கூழர்காள் - பிச்சைமுத
லேற்றா ரிடுவா ரிவரென் றுணர்ந்திரேற்
காற்றாடிக் காலாகலாம்.

(இ - ரை.) "இச்சை யநிச்சை பரவிச்சையோடுழலுங் கொச்சைப்பிராரத்வக் கூழர்காள்" எ-து. இச்சையெனவும், அநிச்சையெனவும், பரவிச்சையெனவும் கூறப்படும். இவற்றுள் ஒன்றேனும் கூட்டிக்

கணமும் நில்லாது ஓன்று திரியும் அற்பமான பிராரத்வ வயப்பட்ட அறிவினர்களே, "பிச்சைமுத லேற்றுரிவெனரிவரென் றுணர்ந்திரேற் காற்றுடிக்காலாகலாம்'' எ-து. பிச்சை முதலியவற்றை யேற்றற்பாலாரும், இதற்பாலாரும் உளரன்றோ? அவர்கள் இனையரென்பது கற்பனைகளாநின்றவற்றை அல்லஅல்லவெனக்கழற்றி மெய்யுணர்வு காணப்பெறுவரேல் காற்றுடியாகாது; அவற்றை நின்றியக்கும் வாயுப்போல நாமாகலாம்—எ-று.

எவரும் பிராரத்வ வயத்தினராயினும் அது அது வயப்படாது அதனை யுணரும் அறிவு யாதோ, அதனது உண்மைநிலையிற் பிறழாது நிற்கவேண்டும்; நில்லாவிடத்து முன்னர்க் கடந்துள்ள பிறவிகள்போல் இஃது பிறது மன்றோ? ஆயின், இனிவரும் பிறவிகளோடு மாகுமன்றோ? அங்ஙனமாயின், யாமுய்வதுதான் எங்ஙனம்? முடிவின்றாதலின் இங்ஙனங் கூறினரென்க. ஆட்டப்படுதலுக்கன்றி ஆட்டுவிப்பதற்குச் சலனமின்மையின் காற்றுடிக் 'காலாகலாம்' என்றார். ஒடென்பதனை எனை யிரண்டிடத்துமொட்டுக. முதல் என்றதனால் எனையவழிகளில் ஏற்றல் பலவாறுள; அவற்றையுந் தழுவிக் கூறினரென்பது பெற்றாம். காலாகுதலே முறைமையாமென்பதுகருத்து. கூழர்காளென்பது விளி. காலாகாவிடத்துக் காற்றுடியாகலாமெனக் குறிப்பித்தலின் மயக்க நிவிர்த்தியணி. (சு௰)

(அ - கை.)

பகிர்முக மாகாதார்க்கு இவ்வனுபவம் எளிதிலெய்து மென்பதை இச்சூவி கூறுகின்றது.

என்னைநான் கண்டபடியிப்புவியி லெல்லோருந்
தன்னையே காணத் தகுங்காணுந் - சொன்மனை
ஞானிநாட்ட மோடுமன முண்ணாட்டம் பெற்று
வெளிநாட்ட மாகா விடின்.

(இ - ரை.) "என்னைநான் கண்டபடி யிப்புவியி லெல்லோருந் தன்னையே காணத் தருங்காணும்" எ-து. எவற்றையும் நன்குணர்ந்து புத்தியாற்றெளிந்துழிச் சகசீவ பரம் அறிவன்றி யில்லையெனத்துணிந்து கூறலால் யானெனலும் அறிவாகவேண்டும். என்னையான் சுருதி, யுக்தி, அனுபவத்தாற் றெளிந்த விடத்துச் சொப்பிரகாசமாகவிளங்கலால் என்னை யான் கண்டவண்ணம் இவ் வுலகின்கண் யாவருந் தன்னைத்தான் காணப்படுமென்பது திண்ணம். "சொன்னேனொளிநாட்டமோடு மனமுனைநாட்டம்பெற்று வெளிநாட்ட மாகாவிடின்" எ-து. நம்மை அறிவே வடிவா நாங் கண்டோமென முன்னரே கூறியிருக்கின்றனன். இப்போது தன்னைத்தான் காணும் முறைமையாவது சற்குருவினால் அகத்தில் விளக்கிக்கொண்ட சிற்பிரகாசநாட்டத்தோடுமனத்தை அந்தர்முகநாட்டத்திற் கியையச்செய்து சற்றும் பகிர்முகநாட்டத்திற் செல்லாதிருக்கப்பெறின்—எ-று.

காணும் அசைநிலை. தன்னையே யென்பதில் ஏகாரம் தேற்றம். உள்நாட்டம் பெற்று வெளி நாட்ட மாகாவிடின் தன்னையே காணத் தருமெனமுடிக்க. இங்ஙனஞ் செய்யாவிடில் தன்னைத்தான் காணத் தகாதென்பது கருத்து. ஒளி நாட்டம் பெறாவிடத்து ஞானயோகம் யாதுசெய்யினும் பயனின்றென்பது தொனிக்கின்றது. இங்கேயொளி நாட்டமெனல் கண்ணொளியை யன்று; தேகத்திலோ ரவயவக் குறியாதலினானும் அஃதழியினுந் தானழியாதிருத்தலினானுமென்க. (௫௫)

(அ - கை.)

கன்மவிதி மாறுமற்செய்தாற் பயனின்றோவெனற்கு இக்கவியில் உத்தரங் கூறுகின்றது.

கன்மந் தவறுமூற் காலந் தவறுமற்
றென்மந் தவறுமற் செய்வரோ – கன்மவிதி
செய்வான் செயலிரண்டுஞ் சித்தத்தே கண்டுதெளிந

(இ-ரை.) "கன்மந் தவறாமற் காலந் தவறாமற் சென்மந் தவறாமற் செய்வரோ" எ - து. சன்மார்க்கத்தில் நிற்போர் நித்தியகன்மந் தவறாமலும், ஆறுகாலந் தவறாமலும், பிறவிகள் தவறாமலும் வழுவாது செய்து நிற்பரோ ? "கன்ம விதி செய்வான் செய விரண்டுஞ் சித்தத்தே கண்டு தெளிந்துய்வோர் பொருளாகுவார்" எ - து. இதனாற் பிறவிகடோறும் உய்தற் கிடமின்மையின், கன்மவிதியை விடாது செய்பவன் யாவனோ அவனையும், அவனியற்றுஞ் செயலினையும் விடாது தமது சித்தத்தே ஞானவொளியாற்கண்டு தெளிந்துய்பவர் யாவரோ, அவர்களே பொருள்பொருளாக விளங்குபவர் — எ - று.

ஓர் பிறவிக்கண் செய்தற்கியையினுஞ் சென்மந்தோறுஞ் செய்தற்கியையாது; இயையினுஞ் செய்வானையுஞ் செயலையுங் கண்டு தெளிவதெங்ஙனம் ? இன்மையின், இவற்றாற் பயன் இன்றென்பது கருத்து. மேல் தாவாமையின் இவற்றாற் பயனின்றெனினும் இப்பயனுறவ் இவற்றாலன்றோ ? இவற்றைச் செய்தே முடிக்கவேண்டுமென்பதுபெற்றாம். தத்துவக்கூட்டங்களைச் செய்வானெனக்காணின் செயலும், பொருள்பொருளாதலும் முடியுமெனக்காண்க. (௬எ)

(அ - தை.)

கொள்கள், இந்நிலை யல்லாதோர் யாது சிறப்புறினும் அவர்கள் வியக்க மகிழ்வதையன்றி வெறுக்காரெனலை இக்கவி கூறுகின்றது.

உள்ளபடி கண்டுகளித் துற்றுருக மாட்டாத
கள்ளரையுங் கண்டு களிப்பரோ - கொள்ளையா
விந்திரசா லக்கமல மெத்தனைபுட் பித்தாலுஞ்
சந்திரனுக் குண்டோர் சலம்.

(இ - ரை.) "உள்ளபடி கண்டுகளித் துற்றுருகமாட்டாத கள்ளரையுங் கண்டு களிப்பரோ" எ-து. தங்கள் தங்களுண்மை வடிவம் யாதோ, அதனை யுள்ளவாறு தரிசித்துத் தன்னையும் உலகையும் உற்று

ப்பார்த்து மனஞ் சிதானந்த வடிவமாக உருகுதற்கு வகை தெரியாது வேடத்தாலும் அபிநயிப்பாலும் மெய்ஞ்ஞானிகள்போலத் தம்மைக் காட்டிப் பிறர் மனைவியரை வஞ்சிக்கும் வஞ்சகர்களையுஞ் சத்துக்கள் கண்டு களிப்பார்கள்; இது யாதுபோலுமெனின், "கொள்ளையா விந்திரசாலக்கமல மெத்தனை புட்பித்தாலுஞ் சந்திரனுக்குண்டோ சலம்" எ-து. கொள்ளை கொள்ளையாக இந்திரசால வித்தையில் மெய்போலக் காணுந் தாமரை யரும்புகள் கணக்கின்றி எவ்வளவு புஷ்பித்தாலும் அதனாற் சந்திரனுக்கு மனவருத்தம் உண்டாகுமோ? உண்டாகாது— எ - று.

மெய்யான தாமரைமலராயின் சூரியனுக்கு மகிழ்ச்சியுஞ் சந்திரனுக்குமனோவாதையும் உண்டாகும். அல்லவே, விருப்புவெறுப்புடையதுபோலக் கொள்ளவந்ததே யன்றி வேறல்ல; அதுபோல மகான்களுமென்றறிக. அவர்களது ஞானானந்தக் களிப்பே இங்ஙனமாகக் காணுமென்க. உள்ளபடி எல்ற இலேசான சுருதிவாசனையாற் கண்டு களிப்பரென்றாயிற்று. கள்ளரல்லாரைக் கண்டு களிப்பதன்றியெனும் பொருடரலால் கள்ளரையும் என்றதிலும்மை இறந்ததுதழீஇய வெச்சம். களிப்பரே என்பதில் ஏகாரம் அசைநிலை. கொள்ளையாவென்னும் வினையெச்சத்தைப் புட்பித்தாலுமென்ற வினையோடு கூட்டி முடிக்க. அதனாலென்பது இசையெச்சம். உண்டோவென்பதில் ஓகாரம் இல்லையெனப் பொருள் தர நிற்றலால் எதிர்மறை. இங்கே சலமென்றது வருத்தத்தை. புட்பித்தாலும் என்றதிலும்மை முற்றும்மை. அவர்கள் உள்ளக்களிப்பே மகிழ்வதாகக்கருதிக் கூறியதென்பதுகருத்து. ()

(அ - கை.)

உண்மையுள்ள மகான் வாய்ப்பது அரிதெனபதை யுவமவாய்க் கூறுகின்றது.

தீங்கடார்ந்து மேன்மேற் செனித்தகருவேலடியின்
மீங்கனிவந் துற்றதொப்ப வாய்த்ததே - ஆங்காங்கும்

எல்லாருந் தேடுபொருள் யாமாக வேயருள
வல்லானின் றிருத்தாண் மலர்.

(இ-ரை.) "தீங்கடர்ந்து மேன்மேற் செனித்த கருவேலடியின் மாங்கனிவந் துற்ற தொட்ப வாய்த்ததே" எ-து. தீமையே பெரும்பா லும் அடர்ந்து மேலுமேலும் ஆகாய மளாவ வுதித்து எங்கணுந் தன் மயமாகக் காட்டுங் கருவேலங் காட்டிடையில் அபூர்வமாக அரிய ஓர் மாங்கனி ஒருவனுக்குக் கிடைத்தால் எங்ஙனமோ அதுபோல் எனக்கு அருமையாகக் கிடைத்ததே; "ஆங்காங்கும் எல்லாருந் தேடுபொருள் யாமாகவேயருள வல்லான் றிருத்தாண் மலர்" எ-து. சுவர்க்க மத்திய பாதாள மென்னும் யாதிடத்தும் அறிஞரெனப் படுவோரும், அவ ரொழிந்த வனையோருஞ் சுருதி யுத்திகளால் இன்னுந் தேடிக்கொண் டிருக்கு மெய்ப்பொருள் யாதோ, அதுதான் யாமெனப் படுவதென்று ஐயந் திரிபறக் காட்டி அதனை எமக்கருளவல்லான் யாவனோ அவனது அழகிய பாதமென்னுந் தாமரைமலர்—எ-று.

கருவேலெனற்கு யோனியாகிய கருவேலங்காடெனினும் அமை யும். இவ்வாறு கூறில் உருவகமாம். திருத்தாண்மலர் வாய்த்ததே யென்லை எழுவாய் பயனிலையாக்குக. வாய்த்ததே என்பதில் ஏகாரம் அசைநிலை. யாமாகவே என்பதில் ஏகாரம் தேற்றம். வல்லானென்பது குறிப்பு வினையாலணையும் பெயர். அருளவென்னும் வினையெச்சம் வல்லானென்னுங் குறிப்புவினைப்பகுதியோடு முடிந்தது. திருத்தாண் மலரெனல் உருவகம். கருவேலங்காட்டிற் கனிமந்ததுபோலக் கருவிற் கும் அமைதலின் அதற் கியைந்தவாறு தீங்கடர்ந்து மேன்மேற் செனி த்த வென்றதுப் பொருள் கொள்க. கனிக்காதாரமாம் மரம், அஃதின் றேற் கனிவாய்த்தல் அருமையெனக் கூறவேண்டுமோ? அதுபோல அயலை நுகர்தற்குரிய போகபூமியிற் றன்னைத்தான் நுகரவெய்தியது அருமையில் அருமையாதலின் இங்ஙனங்கூறினாரென்பதுகருத்து. அக

(அ - கை.)

அதீதத்தில் யாதோர் சற்பனையும் இன்றெனலை இக்கவி கூறுகின்றது.

நானா விருந்ததெங்கே நானபிமா னித்ததெங்கே
வானாள மண்ணாள வாஞ்சையெங்கே - ஞானகுரு
தேசிகனா ரெங்கே சிவசிவா முத்தியெங்கே
பேசிடவா யெங்கே பிளாய்.

(இ - ரை.) "நானா விருந்ததெங்கே நானபிமானித்த தெங்கே வானாளமண்ணாளவாஞ்சையெங்கே" எ-து. ஞானப்பிரகாசமேவீட்டில் நானா விருந்த தென்பது எங்கே? யான் அபிமானித்து நின்றவைகள் எங்கே? திரிலோகத்தையும் ஒருங்கே ஆளவேண்டு மென்கிற அவா வென்பதெங்கே? "ஞானகுருதேசிகனாரெங்கே சிவசிவாமுத்தியெங்கே பேசிடவாயெங்கே பிளாய்", எ-து. மெய்யைத்தெரிவிக்கவந்த உண்மையான ஞானாசிரியர் எங்கே? சிவசிவா முத்தியெனக் கூறுவது எங்கே? இதை எடுத்துச் சொல்ல வாய்தானும் எங்கே? ஒன்று மறிகிலமே சற்புத்திரா!—எ-று.

சுத்த சாக்கிரமான ஸ்வயம்பிரகாச வியாபகத்தில் இங்ஙனமரிய விகற்பங்கள் சற்றுங் காணாதிருக்குமாயின், சுத்தகேவலமான நனவிற் சுழுத்தியின்கண் எங்ஙனங் கூறற் கியையும்? கூடாமையால் 'பேசிடவாயெங்கே பிளாய்' என்றார். எனவே, இவையனைத்துஞ் சொன்மாத்திரமுந் தோற்றன் மாத்திரமுமாக அமையப் பெறுமென்பதாயிற்று. இதுபோன்ற வியப்புநிலை யெங்கணும் இல்லையென்பது கருத்து. "ஒன்றினமுடித்த றன்னின முடித்தல்" என்னும் உத்தியாற் பாதாளத்தையும் வருவித்தாம்., இக்கவியிலுள்ள எங்கேயென்னும் மொழிகள் ஆறும் அறிகிலமென்னும் பொருள்தர நின்றன. பிளாயென்பது இடைக்குறை. வானாளும்மண்ணாளும்வாஞ்சையெனினும் அமையும். (௬௦)

(அ - கை.)

ஆரிய தவங்களாலுஞ் சிரவணாதிகளாலும் அடைந்தபேறு இனைய தெனவிக்கவி கூறுகின்றது.

என்னையே யல்லாமல் யான்பெற்ற தேதுமிலை.
யென்னையான் பெற்றிருந்த தெப்போது - மென்னையன்றிப்
பந்தமிலை வீடுமிலை பார்க்கிலிவை யாராயுஞ்
சிந்தனையு மில்லாததே.

(இ - ரை.) "என்னையே யல்லாமல் யான்பெற்ற தேதுமிலை யென்னையான்பெற்றிருந்த தெப்போதும்" எ-து. சுவயம்பிரகாசவடிவ மாகிய என்னையேயன்றி யாதுமைப்பினும் யானடைந்த பேறு யாது மிலை; என்னையானடைந்த பேறு இப்போதுதானோவெனில் எப்போது மாதலின், "என்னையன்றிப் பந்தமிலை வீடுமிலை பார்க்கிலிவை யாரா யுஞ் சிந்தனையு மில்லாததே" எ-து. அறிவுறியமைக்கு நடுநிலையாகிய என்னைத்தவிரப் பந்தமெனலுமில்லை, முத்தியெனலுமில்லை. இவற்றை நன்குணருமிடத்து இவற்றை ஐயந்திரிபற நன்காராய்தற் கியைந்த அபவாதசிந்தனையுஞ் சற்றுமில்லாமற் போயது—எ-று.

ஏ அசை. இலையென்ற மூன்றும் இடைக்குறை. என்னையே என்பதில் ஏகாரம் தேற்றம். எனவே, சொப்பிரகாச வடிவமாதலின் என்னிடத்தில் எவற்றையும், எவற்றிலும் என்னையும் பிரத்தியட்ச மாகக் கண்டதால் பந்தமெனலும், வீடெனலும், சிந்தனையெனலும் இல்லையெனக் கூறியது திண்ணமெனப் பெற்றும். ஆயினிடத்துண் டாய கற்பிதங்கள் ஆய்ந்தவிடத்து இல்லையென்பது கருத்து. (எச)

(அ - கை.)

யாது மய்மாசநின்று யாதைத் துதிக்கவேண்டுமெனற்கு இக்கவி யில் உத்தரங் கூறுகின்றது.

செப்படிபோற் காட்டியரு டேசிகனை யோவனைத்து
மிப்படிசோ தித்துணர்ந்த வென்னையோ - மைப்படியுஞ்
சென்மமுடி வாகவந்த தேகா லயத்தினையோ
வென்மயமாப் போற்றுவேன் யான்.

(இ-ரை.) "செப்படிபோற் காட்டியரு டேசிகனை யோவனைத்து மிப்படி சோதித்துணர்ந்த வென்னையோ" எ - து. செப்படிவித்தை யெனல் எங்ஙனமோ, அதுபோலப் பொய்யையும் மெய்யையும் ஐயந் திரிபறக் காட்டியருளிய ஞானாசிரியனையோ? அனைத்தையும் இப்படி யாகச் சோதித்துணர்ந்த எனைத்தெதார்த்த நிலையினையோ? "மைப்படி யுஞ் சென்ம முடிவாகவந்த தேகாலயத்தினையோ வென்மயமாப் போற்றுவேன் யான்" எ-து. பிராந்தியே சகசமாகப் படிந்துள்ள சகல சன்மங்களுக்கும் முடிவாக வந்தது யாதோ, அந்தத் தேகாலயத் தினையோ? இவற்றுள் யாதாகரமாக நின்று எதனைத் துதிப்பேன், யான்?—எ - று.

செப்படியாவது கைப்புரட்டு வித்தை. அதாவது பொய்யை மெய் யாக்கி, மீண்டும் பொய்யைப் பொய்யாக்கலை. அதுபோலப் பகிர்முக த்தால் உலகை மெய்பாக்கி, மீண்டும் அந்தர் முகத்தாற் பொய்யாக்கு தலாம். போற்றுவே னென்னும் வினை முற்றிற்கு யானெனல் எழு வாய். தேசிகனை, என்னை, தேகாலயத்தினை என்னும் இம்மூன்றுஞ் செயப்படுபொருள். இக்கவியிலுள்ள மூன்று ஓகாரமும் துணிவுபி விளக்காமையின் ஐயவினை. யாதாக நின்று யாது யாதைப் போற்றுவதென் பது கருத்து. சொப்பிரகாசத்திற்கு அயலின்மையின், ஏனைய பிறவிக ளைத் துதியாதது கருவறுக்கவந்ததினாலென்க. (எஉ)

(அ - ங்கை)

முடிவாகவந்த நூல்தேகத்தை நோக்கி வழுத்தலை இக்கவி கூறு கின்றது.

அன்னமய கோசமா மாகமே யுள்ளளவுஞ்
சொன்னபடி கேட்கிற் சுகமடைவா - யெந்நாளுங்
கெட்டபாழ் வாசனையைக் கிட்டாதே யாதேனு
மிட்டபடி கண்டே யிரு.

(இ - ரை.) "அன்னமயகோசமா மாகமே யுள்ளளவுஞ் சொன்னபடி கேட்கிற் சுகமடைவாய்" எ-து. அன்னமயகோசமாய் நின்றுள்ள தேகமே, நீயிருப்பளவும் யான் சொன்னபடி கேட்டு நிற்கில் சுக துக்கமற்ற பேரின்ப வாழ்வை யடைவை; "எந்நாளுங் கெட்ட பாழ் வாசனையைக் கிட்டாதே யாதேனுமிட்டபடி கண்டேயிரு" எ - து. எக்காலத்திலுங் கேட்டையே தரற்கு இயல்பாயுள்ள பாழையுஞ் சகத் பிராந்தியையும் நினையாது மறந்துவிடு; உணவில் யாதேனும் ஆருணக் கிட்டார்களோ அங்ஙனமாகப் புசித்திருக்கக்கடவை — எ - று.

ஆகமே என்பது விளியுருபு. கர்ப்பிறேனும் புசித்து நிற்கினும் அன்னமயமாதலால் அன்னமய கோசம் ஆகமாமென்றார். நீ சட்பாவ விகாரமாதலின் நீ ஓர் முதலெனக் கருதற்க; பாவிப்பானை யன்றிப் பாவமும் பாவவிகாரமும் வேறன்மையினென்க சொன்னபடிகேட்ட லாவது: இங்ஙனங் கூறியபடி கேட்டலே. எந்நாளுமென்பது இன வெதுகை. வாசனை யென்றது கெட்டபாழென்று அடைகொடுத்தது பிறவியின்கண்ணே செலுத்துதல் இயல்பாதல்பற்றி. ஆதலின் எங்கே யெங்கேயிருந்து யாது கிடைப்பதோ, அதனை யுருசி கருதாது எங்ஙனம் இட்டார்களோ, அந்தப்படிப் புசித்துக்கொண்டிருத்தல் மெய்த்துற வாதலின் யாதேனும் இட்டபடி கண்டே யிருவென்றார். ஆகமே சுக மடைவாய், கிட்டாதே, இருவென முடிக்க. கோசமாமாகமெனல் இரு பெயரொட்டுப் பண்பு. இங்ஙனம் இருக்கின் சுகம் அடைவாயெனத் துதித்தாரென்பது. கிட்டாதே என்பதிலுள்ள ஏகாரமும், கண்டே என்பதிலுள்ள ஏகாரமும் தேற்றம்.

(௬௨)

(அ - கை.)

பொறிகளைநோக்கிப் புகழ்தலை இக்கவி கூறுகின்றது

பொறிகா ளெனைநெடுநாட் போற்றிவளர்த் தீரே
யறிவானந் தப்பொருளா னேனேன் - பிறிவாகு
மூங்களையு நானு வுணர்ந்துகொண்டே னீங்களினி
யிங்கழியா தொன்று யிரீர்.

(இ - ரை.) "பொறிகா ளெனை நெடுநாட் போற்றிவளர்த்தீரே யறிவானந்தப்பொருளா னேனேன்" எ - து. ஐம்பொறிகளாய் நின்றுள்ளவர்களே, என்னை நெடுநாளாகக் காத்து வளர்த்தீர்களே; அதனால் யான் அறிவானந்தப்பொருளாக விளங்குகின்றேன்; "பிறிவாகு மூங்களையு நானு வுணர்ந்துகொண்டே னீங்களினி யிங்கழியா தொன்று யிரீர்" எ - து. பற்பல பேதமாயுள்ள உங்களனைவரையும் எனது எதார்த்தவடிவமாகக்கண்டு தெளிந்துகொண்டேன்; அதுபோல நீங்களும் முன்போற் பற்பல பேதமாக நின்றழியாமல் இனியேனும் என்போல் ஒன்றாக நிற்கிற் சுகம் அடைவீர்கள்; அங்ஙனம் நிற்றல் உங்களுக்கியல்பு. நிலையன்றாகலின் ஒருகாலும் நில்லீர்—எ - று.

பொறிகாளெனல் விளியுருபு. பல சன்மங்கடோறு மெனலை நெடுநாளென்றார். வளர்த்தீரே என்றதில் ஏகாரம் வினா. ஒன்றின் விடயத்தை மற்றொன்று பொறி யறியாதாதலின், பிறிவாகு மெனப்பட்டது. அறிதற்சேட்டை பலவாயினும் அறியும் வினைமுதல் அறியாதலின், நானுவுணர்ந்துகொண்டே னெனப்பட்டது. கருத்துத் தெளிப் படை. (எச)

(அ - கை.)

ஆசையை நோக்கிப் புகழ்தலை இக்கவி கூறுகின்றது.

ஆசையே யுன்றன் லலைந்துவிட்டே னென்றாலு
நீசையுப காரத்தி னின்றேனே - தேசிகனை

யுன்றோ லடைந்தே னுனைக்கூடி முத்தியினு
மென்றனை காரையி னேன.

(இ - ரை.) "ஆசையே யுன்ற லலைந்துவிட்டே னென்றாலும் நீசெயுபகாரத்தில் நின்றேனே" எ - து. பிறவிதோறும் என்னைவிட்டகலாது நின்ற எனதாசையே! இதுகாறும் உன்னால் இன்பத் துன்பமென்னும் அலைகளான் மொத்துண் டலைந்துவிட்டேன். அங்ஙனம் இருக்கினும் இப்போது நீ யெனக் கடிமையாகச்செய்த உபகாரத்தின் வழித்தில் அலையாது நின்றுவிட்டேன்; "தேசிகனை யுன்றாலடைந்தேனுனைக்கூடி முத்தியினு மென்றனை நாரையினேன்" எ - து. எங்கணுந்தேடியுங்கிடைத்தற்சரிய ஞானாசிரியனைக்கண்டு அவனைச் சரணாகதியென்று உன்னா லடைந்தனன். இதன்றியும் மேலாய நிலைக்கு நீ ஆப்தனாயிருப்பதால் உன்னை விட்டகலாது உன்னோடுகூடி நிரதிசயானந்தமாகிற முத்தியின் கண்ணும் எங்கப்பானை யயலாகாது நானேநானாயினன் — எ - று.

விஷயவாசனையால் அலைந்துவிட்டேனெனவும், உபசாந்தியாசையால் நீசெய்யுபகாரத்தில் நின்றேனே யெனவும், தேசிகனை யடைந்தேனெனவும், நானாயினேனென்வுங் கூறியவாறு காண்க. ஆசையே யென்பதிலுள்ள ஏகாரம் விளியுருபு. நின்றேனே என்பதிலுள்ள ஏகாரம் ஆசைகிலை. முத்தியினும் என்றதின்கண் உம்மை விடயத்தில் அது நானாயிருந்ததன்றியெனப் பொருள்தரலால் இறந்தது தழீஇய எச்சம். என்றனையுமெனக்கூறியது யான் அடைந்த பேறு அசத்தியமன்று என ஸ்திரப்படுத்துவான் வேண்டியென்க. அலைந்தேனென்றது விட்டேனென மிகைபடக்கூறியது அலைந்ததை ஸ்திரப்படுத்துவான்வேண்டி யென்க. என்றாலும் என்றதின்கண்ணுள்ள உம்மை விடயத்தைச் சிறப்பித்தலால் இழிவு சிறப்பு. இங்ஙன மிருப்பதுபற்றி ஆசையைப் புகழ்ந்தாரென்பது கருத்து. (௯௩)

(அ - கை.)

கோபத்தைநோக்கி வேண்டிக்கோடலை இக்கவி கூறுகின்றது.

கோபமே யுன்னாற் குறைதீர்ந்தே னீயெழும்பித்
தாபமே செய்யுஞ் சலிப்பாலே - யாபத்து
நீங்கியுப சாந்தியிலே நின்றேன் கனவிலுநீ
யேங்கியெழும் பாதே யிரு.

(இ - ரை.) "கோபமே யுன்னாற் குறைதீர்ந்தே னீயெழும்பித் தாபமே செய்யுஞ் சலிப்பாலே" எ - து. சதாகாலமும் என்னைவிட்டகலாத கோபமே! இதுகாறுந் தீராத குறைகளை யுன்னால் இப்பொழுது தீர்த்துவிட்டேன். நீ யெண்ணுளெழும்பி விடாப்பகையை விளைவிக்க அதனால் விளையுஞ் சலிப்பினால், "ஆபத்து நீங்கி யுபசாந்தியிலே நின்றேன் கனவிலு நீ யேங்கியெழும்பாதே யிரு" எ - து. இஃதன்றியும் நேரிட்ட ஆபத்தினின்று நீங்கி யுபசாந்த வாழ்விலே நிலை பெற்றேன். இவ்வளவு உதவிசெய்த நீ மறந்து முனது விசுவரூபங் கொண்டெழும்பாமல் எனக்குத் துணையா யிரு—எ - று.

இங்கே தாபமெனல் விடாப் பகையை, ஆபத்தெனல் பிறரால் வருந் தண்டனைகளை; உபசாந்தியெனல் சனன மரணத்தில் தீருதலை. எனவே, கோபமெனல் பகிர் முகத்தில் விடாத நிலையும், அந்தர் முகத்தில் அதன் நீக்கத்தையுந் தருநற்கிரியைத்தென்பது பெற்றாம். உபசாந்தநிலையில் எனை விடு தடியென்றும் இருப்பாயென வேண்டிக்கொண்டதென்பது கருத்து. (௭௫)

(அ - கை.)

உலோபத்தை நோக்கிப் புகழ்தலை இக்கவி கூறுகின்றது.

செல்வமே யுன்னை யுறவுகொண்டே னின்றைகிற்
பாவமே யென்பருண்மை பற்றுவார் - நீபெருக

யார்ச்சிக்க வேபடுவா யாகாகா வுன்றலே
யார்ச்சிக்கப் பட்டே னமைவு.

(இ - ரை.) "லோபமே யுன்னை யுறவுகொண்டே னின்றெழிற் பருவமேயென்ப ருண்மை பற்றுவார்" எ-து. என்றும் என்னை விட்டகலாது நின்ற உலோபத்துவமே! எப்போது முன்னை யுறவுகொண்டனன். ஊனது வயப்படிற் றீவினைக்கே இடமாதலிற் பாவமே விளையுமெனச் சத்துக்கள் கூறுவர்; "நீபெருக வார்ச்சிக்கவேபடுவா யாகாகா வுன்றலே யார்ச்சிக்கப்பட்டே னமைவு" எ-து. நீ யாவராலும் என்றும் பழிக்கப்பட்டே நிற்பை. இப்படிப்பட்ட உன்றல் உபசாந்த நிலைக் கிடமானேன். இஃதென்ன ஆச்சரியம்! — எ - று.

இங்கே உலோபத்துவமெனல் தன்னைக் கொடுத்துத் தன்னை வாங்காமையை. இதனாற் சிறுமையும் இப்போது ஞானாசிரியன் பால் தன்னைக் கொடுத்துத் தன்னை வாங்கினதால் பெருமையும் வரக் கிடந்தமை காண்க. இங்கே உண்மையெனல் ஞாதுருஞானங்கட் கிடையிலாகிய ஸ்திரஞானத்தை. இருவயினும் ஆர்ச்சிக்கப்படலெனல் புகழப்படுதலை. அது பிறவிக்கு இயைதல், இது விடுதிக்கு இயைதல். ஆ ஆ ஆ வெனில் ஆகாகாவென்றாயது விகாரத்தாலென்க. ஆர்ச்சிக்கப்பட்டாயமைவும் எனப் பாடமோதி யுரைகூறுவாருமுளர். பாவமேயென்பதிலுள்ள ஏகாரமும், ஆர்ச்சிக்கவே படுவாயென்பதிலுள்ள ஏகாரமும் தேற்றம். உன்றலே என்பதின்கணுள்ள ஏகாரம் அசைநிலை. இதனால் தோனிப்பது இழிவைக் காட்டினும் பெருமையே சிறந்ததென்பது கருத்து. (எஎ)

(அ - தை.)

மனத்தை நோக்கிப் புகழ்தலை இக்கவி கூறுகின்றது.

நெஞ்சகமே நானேநீ நீயேநா னென்றிருந்தும்
வஞ்சகமா வென்னை மறந்தனையே - தஞ்ச

முனக்குநா னென்பதுவு முண்மையே யுண்மை
யெனக்குநீ வேறா யிராய்.

(இ-ரை.) "நெஞ்சகமே நானேநீ நீயேநானென்றிருந்தும் வஞ்சக மாவென்னை மறந்தனையே" எ-து. எனக்குள்வா நின்று எப்போதும் என்னைவிட் டகலாத மனமே! இதுகாறும் நானே நீயெனவும், நீயே நானெனவும் அபேதமாகவெண்ணி யிருந்தனம். அங்ஙனம் இருந்தும் என்னை வஞ்சிப்பான் வேண்டி இப்போதென்னை மறந்தனை; "நெஞ்ச முனக்கு நானென்பதுவு முண்மையே யுண்மை யெனக்கு நீ வேறா யிராய்" எ-து. உனக்கு நானாதரவென்பது எங்ஙனம் உண்மையோ, அது போலவே எனக்கு நீயாதரவென்பது உண்மையன்றோ? அங்ஙன மிருக்க இனியேனும் எனக்கு நீ வேறாகாது நில்—எ-று.

நானே, நீயே, உண்மையே என்பவற்றிலுள்ள ஏகாரங்கள் தேற் றம். மறந்தனையே என்பதில் ஏகாரம் அசைநிலை. இராயென்பது எதிர், மறை முன்னிலை வினைமுற்று. என்றிருந்து மென்பதின்கண்ணுள்ள வும்மை இழிவு சிறப்பு. பகிர்முகத்தில் அபேதமாக நின்றவாறுபோல விட்டபோது அந்தர்முகத்தில் நில்லாததால் 'வஞ்சகமா வென்னை மறந்தனையே' என்றார்; தனதிட்டத்திற்கு முரண் வந்தமையின். நெஞ்ச மெனாற்கு ஆதரவு அடைக்கலம் எனப் பொருள் கொள்ளினும் அமை யும். உனக்கு நானென்பதுவும் என்றதனால் எனக்கு நீயென்பதுவும் என்றிருக்கவேண்டு மாதலால், அம்மொழி எஞ்சி நிற்பது இசையெச் சம்; எண்ணும்மையாதல்பற்றியென்க. இருவயினும் விவேகத்திற்குத் துணை மனத்தையன்றி வேறில்லையென்பது கருத்து. (௭௮)

(அ - கை.)

இ ரு வ ம து.

ஓடித் திரிந்தா யுழைத்தாய் பிழைக்கும்வழி
தேடிப் பலகலையுஞ் சிந்தித்தாய் - நாடியொரு

சற்குருவைத் தந்தாயென் சிந்தாய் தயவுசெய்த
நிற்குதவி யென்செய்தே னே.

(இ - ரை) "ஓடித் திரிந்தா யுழைத்தாய் பிழைக்கும்வழி தேடிப் பலகலையுஞ் சிந்தித்தாய்" எ-து. கட்டுக் கடங்காது இதுகாறும் ஓடித் திரிந்தனை; அவலமாக ஊருக்கே யுழைத்தனை. இனிச் சனன மரணத் துதைவிட்டுத் தப்பித்துக் கொள்ளும்வழிதேடி மகான்களால் இயற்றிய ஞானநூல் பலவற்றையுங் கேட்டுச் சிந்தித்தனை; "நாடியெனக்கொரு சற்குருவைத் தந்தா யென் சிந்தாய் தயவு செய்த நிற்குதவி யென்செய்தேனே" எ-து. குறிகுணங் காரணமாகநாடி ஒரு சற்குருவை யெனக்குத் தந்தனை. என்மனமே! இங்ஙனமாய சிறந்த உபகாரத்தைச் செய்த உனக்கு யாது பிரதியுபகாரம் யான் செய்தனன்?—எ - று.

ஏகாரம் அசை. பிழைக்கும் வழி தேடி யென்றதனால் பலகலையுமென்றது மகான்களாலியற்றிய ஞானநூலென்று உரைகொண்டாம். இங்கே தயவெனல் உபகாரம். பகிர்முகத்ததாயவழி அகண்ட மனமெனவும், அந்தர் முகத்ததாயவழிச் சுத்தமனமெனவும் பெயர் ... இயைந்ததை அருத்தாபத்தியாற் காண்க. கருத்து வெளிப்படை. (...)

(அ - கை.)

## இ து வு ம து.

உன்னுருவா நானிருந்த வுண்மைபோ லென்மனமே
யென்னுருவா நீவந் திசைந்தனையே - தெய்ந்நன்றி
பாராட்டு வாருனைப்போ லுண்டோ பரமபதச்
சீராட்டினோ மாறு திரு.

(இ-ரை.) "உன்னுருவா நானிருந்த வுண்மைபோ லென்மனமே யென்னுருவா நீவந் திசைந்தனையே" எ-து. இதுகாறும் நினதுகொள்கைக் கிசைந்தவண்ணம் உனது சொரூபமாகவே யான் இருந்தனன்.

யானிருந்த எதார்த்தம் எங்ஙனமோ அதுபோல என்னைவிட்டகலாத மனமே! என் சிந்தைக்கு இசைந்தவாறு என்றுண்மை வடிவமாக நீயும் நிசைந்தனை; "செய்ந்நன்றி பாராட்டொருவனைப்பேணு முண்டோ பரமபதச் சீராட்டின் மாறுதிரு" எ-து. பிறர்செய்த நன்றியை மறவாதுபாதுகாப்பவர்கள் உன்னைப்போல் ஒருவருளரோ! இல்லையே. ஆதலின், இப்போது அரிதிற்கிடைத்த பரமபதமாகிற பேரின்ப வாழ்வில் மாறுது என்றும் ஒரு தகைத்தாய் நில்—ஏ - று.

செய்ந்நன்றி யென்பதில் யகர வொற்று ஆசெதுகை. உன்றுருவெனல் கற்பனு வடிவை, என்றுருவெனல் கற்பனு ரகித வடிவை. பாராட்டல், மறவாது காத்தல், சீராட்டல் செல்வப் பெருக்கை. கருத்து வெளிப்படை. (௯0)

(அ கை.)

இ து வு ம து.

ஆசைவர்க்க மெல்லா மகற்றிப் பொறைமுதலாந்
தாசவர்க்கஞ் செய்யநலந் தந்தனையே - நேசத்தா
லாதிகா லந்தொடுத்தென் னன்புவிடா நெஞ்சேநன்
னீதியா லென்போல நில்.

(இ - ரை.) "ஆசைவர்க்க மெல்லா மகற்றிப் பொறை முதலாந் தாச வர்க்கஞ் செய்ய நலந் தந்தனையே" எ - து. ஆசைபோல் அதற்கினமாயுள்ளவை எவையோ, அவையனைத்தையும் ஒருங்கேயொழித்துப் பொறுமை முதலாகிய தாசவர்க்கத்திற் கியைந்தவைகளைச் செய்ய ஊர்த்தமுகமாய நன்மையை எனக்குத் தந்தனையே; "நேசத்தா லாதிகாலந்தொடுத் தென்னன்பு விடாநெஞ்சே நன்னீதியா லென்போல நில்" எ-து. உனக்கும் எனக்குமிருந்த நேசத்தினுல் உலகந் தோன்றியகாலமுதல் இதுகாறும் என்னிடத்தில் வைத்த அன்பு விடாமனிற்கும் மனமே! ஒழுங்ககலாமார்க்கமெங்ஙனமோ, அங்ஙனம் ... பொருக்கு கடுநிலையில் நில் — எ - று.

அஞ்சவர்க்கமென்பன: இராகத்வேஷமுதலிய தீய குணங்களை. பொறைமுதலநற் தாசவர்க்கமென்பன: பொறுமை, அடக்கம், பிறர் பொருள் நயவாமை, சினமடக்கல், நடுநிலையினிற்றல், வஞ்சியாமை முதலிய நற்குணங்களை. தந்தனையே என்பதில் ஏகாரம் அசை. பகிர் முகத்ததூரசச் சேறல் நினக்கு இயல்பாயினும் ஆங்காங்கே தீயநெறிக் கியைந்தவைகளை யான் மறுக்கினுஞ் சிற்சில காலத்தில் ஏற்றுக் கொண்டு நடந்தமைபற்றி 'என்னன்புவிடா நெஞ்சே' என்றார். நன்னீதியாவது இனிப் பிறவிக்கியையாத நெறி. வர்க்கமெனல் கூட்டம். ஆதிகாலமெனல் பிரகிருதி தத்துவமுதலாயவற்றை. கருத்து வெளிப் படை. (அ௯)

(அ-கை.)

ஊர்த்த முகம், அதோமுகமென்னும் இரண்டு திசைக்கண்ணும் என் மனம் ஒத்து யானும் இருந்தேனெனல இக்கவி கூறுகின்றது.

என்னெஞ்ச மூருலவ யானுமது போலிருந்தே
யின்னஞ் சமமாகா விட்டேனே - யென்னெஞ்ச
மென்போ லசையா திருக்கவது போல்யானும்
பொன்போ லிருந்தேன் பொலிந்து.

(இ - ரை.) "என்னெஞ்ச மூருலவ யானு மதுபோலிருந்தே யின் னஞ் சமமாகா விட்டேனே" எ - து. தீர்க்க சொப்பன சகந் தோன்றி யதுமுதல் இதுகாறும் என்மனம் ஊரிலுலாவ, யானும் அதனிஷ்டப் படி யிருந்து இன்னமுஞ் சமத்துவ நிலையாகாது அழித்து விட்டனன்; "என்னெஞ்ச மென்போ லசையா திருக்க வதுபோல் யானும் பொன் போலிருந்தேன் பொலிந்து" எ-து. இப்போது என்மனம் என்னைப் போல அசையாதும் மாற்றுயர்ந்த பொன் எங்ஙனமோ அதுபோல் இடை விடாது பிரகாசித்திருந்தனன்—ஏ - று.

யானும் அதுபோல் என்பதிலுள்ள உம்மை இழிவு சிறப்பு, யானும் பொன்போல் என்பதின்கணுள்ள உம்மை உயர்வுசிறப்பு. விட்டேனே

யென்பதின் ஏகாரம் அசை. பரிபூரணமாக விளங்கல் விவேகத்தி னிலைமை. அதற்குச் சலனத்துவ முண்டாவதாகக் காண்டல் மனத்தி னிலைமை. சலமும் அதன் அசைவும்போல் இருத்தலின் பேதமெனக் கண்டாம். இங்ஙனமாயநிலையை நீயிருந்தகாலெனென்பது கருத்து. (அ௨)

(அ - கை.)

உயர்வு தாழ்வு என்னையன்றி யின்மை யெனலை இக்கவி கூறு கின்றது.

ஏதுவர வேண்டு மதுவருக வென்னைவிடுத்
தேதகல வேண்டு மஃதகல்க - கோதென்று
பிச்சையுந் தள்ளேன் பிரமபத மும்வேண்டே
னெச்செயலு நாறுகி னேன்.

(இ - ரை.) "ஏது வரவேண்டும் அதுவருக வென்னைவிடுத்தே தகலவேண்டு மஃதகல்க" எ - து. எனக்கு இம்மையிலே யாது உ வேண்டியதோ அதுவரக்கடவது; என்னைவிட்டு ஏதுபோகத் த ந்ததோ அது போகக்கடவது; "கோதென்று பிச்சையுந் தள்ளே பிரமபதமும் வேண்டேனெச்செயலு நாறுகினேன்" எ - து. ஈன முடையதென்று பிச்சையெடுத்தலையும் தள்ளமாட்டேன்; கெம்பீர முடையதென்று பிரமபதத்தையும் வேண்டமாட்டேன்; ஏனெனில் யாது கிர்த்தியமும் நாறுகியதால் — எ - று.

இன்பத் துன்பமெனக் காட்ட இருவயினும் ஏதேதென்றுங் பிச்சையும் பிரமபதமு மென்பவற்றிலுள்ளவை எண்ணும்மைகள். ஏச் செயலு மென்பதிலுள்ளது முற்றும்மை. "அற்றுலளவறிந்துண்க வஃ தூடம்பு பெற்றுனெடிதுய்க்குமாறு." என்பதில் அஃதுடம்பென்னும் பதத்தில் ஆய்த மலகுபெற்றுற்போல இக்கவியிலும் அஃதகலவென் னும் பதத்திலுள்ள ஆய்தம் அலகு பெறுமெனக் கருதி இங்ஙனங் கூறினரென்க. எப்பொருளும் யானுயவிடத்து அவ்வவற்றின் புடை

பெயர்ச்சியும் யானுதற் கையமுளதோ? இன்றுதலின் ஏற்கற்பாற்று. சகலவியாதிகளுஞ் சகல சேட்டைகளும் என்னையன்றி யின்றென்பது கருத்து. (அரு)

(அ - மை.)

அஞ்ஞானகாலத்திலும் ஞானகாலத்திலும் போகிப்பானும் போகிக்கப்படுவனவும், ஆராதிப்பானும் ஆராதிக்கப்படுவனவும் இவ்வனுபவிக்கு இவனையன்றி வேறின்றெனவிலை இக்கவி கூறுகின்றது.

எங்கேநான் போற்றுவது மென்னையே தேவதையென்
றெங்கே தொழுவதுநா னென்னையே - யெங்கே
யிருந்துகிடந் தோடுவது மென்னிடத்தே நானே
யருந்துவதுங் கொள்வானு மாம்.

(இ - ரை.) "எங்கே நான் போற்றுவது மென்னையே தேவதையென் றெங்கே தொழுவதுநா னென்னையே" எ-து. யாதிடத்தில் இதை யான்தெய்வமெனப்போற்றுவதெனின் என்னிடத்தில் என்னையுனவும், யாதிடத்தில்யாதை யான்தெய்வமெனத் தொழுவதெனின் என்னிடத்தி லென்னையெனவும், "எங்கே யிருந்துகிடந் தோடுவது மென்னிடத்தே நானே யருந்துவதுங் கொள்வானுமாம்" எ - து. யாதிடத்தில் யான் நிற்றலுங் கிடத்தலும் ஓடுதலுமெனின் என்னிடத்தி லெனவும், யாதிடத்தில் யான் சுகித்தலுஞ் சுகிக்கப்படுவதுவுமெனின் என்னிடத்தில் யானேயெனவுமாம்—எ - று.

போற்றல், துதித்தல், தொழுதல், வணங்கல், இருத்தல், நிற்றல், கிடத்தல், படுத்தல், அருந்துதலுங் கொள்வானுமாமெனல் சகல புடைபெயர்ச்சியும் அவற்றின்செயப்படுபொருளும் யானேயெனவே ஸ்வயம் பிரகாச நாட்டம் அகலாவிடத்து இவைமுத்தமனைத்தும் முரணுதலைமயும். அந்நாட்டம் இழந்தாரெங்ஙனம் ஏற்பர். உடனோட்டத்தில் எல்லாமையும் உணர்வுநாட்டத்தில் ஏற்பதுவுமா யிருத்தலின், இதனை விழுவென்த் தள்ளற்க. இவனே யித்தனையு மென்பது கருத்து. (அசு)

(அ - கை.)

மகான்கள் தமதனுபூதியில் பொருள், இடம், காலங்கட்கிடம் தாமே யெனவும், தம்மையின்றி இல்லையெனவுங் கொள்ளும் நிலையினை இக்கவி கூறுகின்றது.

தன்னிடத்தி லேதோற்றித் தன்னிடத்தி லேயிருந்து
தன்னிடத்தே கூடுஞ் சகத்தெல்லாந் - தன்னைவிட
வேறன் றெனக்காண்ப ரல்லாலிவ் வீடுபெற்றோர்
மாறென்று காண்பரோ மற்று.

(இ - ரை.) "தன்னிடத்திலே தோற்றித் தன்னிடத்திலே யிருந்து தன்னிடத்தே கூடுஞ் சகத்தெல்லாம்" எ - து. மகான்கள் தாமாகிற சிதாகாயத்தினிடத்திற் றோற்றித் தன்னிடத்திலே யிருந்து தன்னிடத்திலே ஏகமாகக் கூடுஞ் சகத்தனைத்தும் "தன்னைவிட வேறன்றெனக் காண்ப ரல்லா லிவ்வீடுபெற்றோர் மாறென்று காண்பரோ மற்று" எ-து. தன்னைத்தவிர வேறல்லவெனக் காண்பார்களேயன்றி யிங்ஙனமாய முத்திநிலை யடைந்தவர்கள் பெயர்த்துந் தனக்கு வேறெனக் காண்பர்களோ! ஒருபோதுங்காணார்—எ - று.

பகிர்முகம்அந்தர்முகமென இரண்டாம். பகிர்முகத்தது உலகம், அந்தர்முகத்தது அறிவு. அறிவும் உலகமும் சலமும் அலையும் போல்வது. சலநாட்ட முள்ளவிடத்து அலை வேறாகக்காணுமா? அதுபோல அறிவு நாட்டமுள்ளவிடத்துச் சகத்து வேறாகக்காணுமா? காணாதாதலால் இவ்வனுபவம்பற்றி இங்ஙனங்கூறினரென்க. இங்கே மற்றென்பது பின்னருமெனப் பொருள் தர நின்றது. என்னை? "வினைமாற்றசைநிலை பிறிதெனுமற்றே" என்னும் இலக்கணத்தாலென்க. இக்கவியிலுள்ள ஏகார மூன்றுந் தேற்றம். காண்பரோவென்பதில் ஓகாரங் காணாரென்னும் பொருள் தரலால் எதிர்மறை. சிதாகாயமெனப் பொருள் கொள்ளாவிடத்துத் தன்னிடத்திலே யென்பன மூன்றும்

முருளுக்கே யிடமாதலால் மயக்கவணி. சிதாகாயத்தையன்றித் திரி யெயம் வேறின்றென்பது கருத்து. (அடு)

(அ - கை.)

இவர்கள் யாதுக்குங் கலங்காரெனவில இக்கவி கூறுகின்றது.

ஏதுக்கா சைப்படுவா ரேதுக் ககங்கரிப்பா
ரேதுக்கு மாச்சரிய மெய்துவா - ரேதுக்குந்
தாமே சராசரமாத் தானுவா வேழ்புவிக்கு
மாமேரு வொத்துவாழ் வார்.

(இ - ரை.) "ஏதுக் காசைப்படுவா ரேதுக், ககங்கரிப்பா ரேது க்கு மாச்சரிய மெய்துவார்" எ - து. இந்த மகான்கள் சிதாகாசமாகிற தன்னைத்தவிரத் தினைத்துணையும் மாறாக வேறின்மையின் இவர்கள் எதற்காக ஆசைப்படுவார்கள்? எதற்காக அகங்கரிப்பார்கள்? எதற்காகக் கெவ்வீரமடைவார்கள்? எனெனில், "ஏதுக்குந் தாமே சராசரமாத் தானுவா வேழ்புவிக்கு மாமேரு வொத்துவாழ்வார்" எ - து. சமஸ்த த்திற்குந் தாமே சராசரமாகியும், இருவகையா நின்றுள்ள சத்தபூமி கட்குந் தாமே யாதாரமாகியும் நிற்றலால் எவற்றிற்கும் மேலாய மகா மேருவையொத்து வாழ்வாரெனற்கு யாது மூரண்? இல்லை—எ - று.

சராசரமென்பது: இயங்குதிணை நிலைத்திணையை. இருவகை யேழ்புவியாவன: அஞ்ஞான பூமி ஏழும், ஞானபூமி ஏழும், என்பவ ற்றை. "குணமென்னுங்குன்றேறிநின்றார்" என்றிருத்தலின் மாமேரு வொத்து வாழ்வாரெனக்கூறினர். ஒத்து வாழ்வார் என்னும் பொரு ளுக்காக சீர்பிரிக்கின் தளைதட்டுமாதலின், ஓசை நோக்கால் வாழ் வார் என்பதில் வார் எனப் பிரித்துச் சீர்கொள்க. அது வகையுளி செய்தலென்னும் இலக்கணத்தாலெனக. சுசாதிக முதலிய மூன்றுங் கழன்றனரென்பது கருத்து. (அசு)

(அ - கை.)

யாது யாதாகமாறினுந் தமக்குச் சலன மின்றென்பதை இக்கவி கூறுகின்றது.

மாதிக்கு மாறி மதிகருகித் தீக்குளிர்ந்திவ்
வாதித்தன் றெற்குவடக் காணுலுஞ் - சோதித்து
முன்னிலைமை யாராய்ந்த முத்தரே யென்ஞான்றுந்
தன்னிலைமை குன்று தவர்.

(இ - ரை.) "மா திக்கு மாறி மதி கருகித் தீக்குளிர்ந் திவ்வாதித் தன் றெற்குவடக் காணுலும்" எ - து. ஓர் திக்கிருக்குமிடத்து மற்றோர் திக்குவந்துமாறிச் சந்திரன் உட்டணத்தாற்கருகி யக்கினி சீதள தர்மத்தை யடைந்து இந்தச் சூரியன் கிழக்கு மேற்குவிட்டுத் தெற்கு வடக்காக வுதயாத்தமனமாகி நிற்கினும், "சோதித்து முன்னிலைமை யாராய்ந்த முத்தரே யென்ஞான்றுந் தன்னிலைமை குன்றுதவர்" எ - து. சுருதி யுத்திகளால் ஆராய்ச்சி செய்து பூருவமாயிருந்த தமது நிலையினை யனுபவத்தால் ஆராய்ந்து தெளிந்த சீவன் முத்தரென்படுபவரே யெந்தக்காலத்துந் தன்னிலைமையினின்று மாறுதவர்கள் — எ - று.

மாறுந்தன்மையது கூறியதால் மாறுத்தன்மையதையுங் கூறினுரென்க. யாது மாறினுஞ் சிதாகாயத்திற் கின்மையின் சீவன் முத்தனை ச் சிதாகாயமெனக் கொள்க. பூதாகாயத்திற்கு முன்பின் இடை யெக்காலமுமெனக் கற்பித்துக் கூறினும் அஃதேதற்கில் சிதாகாயமும் ஏற்குமென்பம்; அங்ஙன மின்றே. ஆதலின் இவ்வுவமை பொருந்து மென்க. ஓராகாயமே சடத்தன்மையாயவிடத்துப் பூதாகாயமெனவும், சித்தாத்தன்மையாயவிடத்துச் சிதாகாய மெனவுங் கோடற்கு இயையுமேனுந் தான் அவை யிரண்டு மன்மையின் இதுபோல்வாரைக் குன்றுதென்றனர். சிதாகாயமா நிற்றலின் இவாகட்குச் சலன மின்றென்பது

[அவ

(அ - கை.)

ஞானிகள் செயல் இஃதென இக்கவி கூறுகின்றது.

மெத்தென்ற சொல்லும் விருப்பமற்ற நோக்குமெலாஞ்
சத்தென்ற நெஞ்சுந் தளர்நடையுஞ் - சித்தத்
தடங்கா மகிழ்வு மனவரதம் பெற்ற
திடந்தானே ஞானி செயல்.

(இ - ரை.) "மெத்தென்ற சொல்லும் விருப்பமற்ற நோக்குமெலாஞ் சத்தென்றநெஞ்சுந் தளர்நடையும்" எ - து. கடினமில்லாத சொல்லும், விருப்பமில்லாத பார்வையும், சமஸ்தத்தையும் உண்மை வடிவுமாகக் கருது மனமும், சோர்வுள்ள நடையும், "சித்தத் தடங்கா மகிழ்வு மனவரதம்பெற்ற திடந்தானே ஞானிசெயல்" எ-து. அடக்க அடங்காத உள்ளக் களிப்புஞ் சதாகாலமும் ஐயந்திரிபின்றிப் பெற்ற கலங்காத நிலையே ஞானிகள் இயற்றுஞ்செயல் — எ - று.

சிதாகாயத்தையன்றி வேறின்மையின் விருப்ப மற்ற நோக்கெனவும், ரூபாரூபங்களைக் கரைத்து அனைத்தையுஞ் சிற்பிரகாசமாகக் காண்டலின் எலாஞ் சத்தென்ற நெஞ்செனவும், யாதுசார்பு மின்மையின் தளர்நடையெனவும், சுருதியுத்தியாலல்லாமல் ஆசிரியன் அருளைக்கலெய்தலின் சித்தத்தடங்கா மகிழ்வெனவும், அறிவறியாமைக் கிடை நிற்கும் திரஞானமே தீர்வெனக்காண்டலின் அனவரதம்பெற்ற திடந்தானெனவுங் கூறியவாறு காண்க. கருத்து வெளிப்படை. (சுக)

(அ-கை.)

மகான்களது சிந்தை யினையதென இக்கவி கூறுகின்றது.

எல்லா விடத்து மெமைக்கண்டோ மெம்மிடத்தி
லெல்லாமுங் கண்டோமென் றேகமாகி - கல்லாண்ம
கற்று வனுபூதி கைகண்டார் மற்றேது
மற்றார்சீ வன்முத்த ராம்.

(இ - ரை.) "எல்லாவிடத்து மெமைக்கண்டோ மெம்மிடத்தி லெல்லாருங் கண்டோமென்று" எ - து. சிதாகாசமே யாமாதலின் எல்லா வுலகின் கண்ணும் எமதெதார்த்த வடிவினைக் கண்டனம். அங் ஙனங் கண்டபடி எம்மிடத்திலுஞ் சமஸ்த வுலகங்களையுங் கண்டன மென்று ஐயமறத் தெளிந்து, "ஏகமாக் கல்லாமை கற்ற வநுபூதி கைகண்டார் மற்றேது மற்றார் சீவன்முத்தராம்" எ - து. ஆபேத மாகப் படியாது படித்த அனுபூதிநிலையை உள்ளங்கை நெல்லிக்கனி போற் பிரத்தியட்சமாகக்கண்ட மகான்கள் யாவரோ அவரே சொல்லி லடங்காத பந்தங்கள் சிறிதுமின்றிக் கழன்றவராகிய சீவன்முத்த ரெனற்கு இயைந்தவராவர் — எ - று.

சிதாகாசமே சக சிவ பரமாகப் பரிணமித்ததென்றற்குப் பிரத்தி யட்சானுபவ மில்லாவிடத்து மூரணெய்துமாதலின், அனுபூதி கை கண்டாரென்றார். கல்லாமை கற்றல்: ஞானாசிரியரது கடைநோக்குக் கெதிர்காத்தலே. அனுபூதி கண்டாரென்றது கைகண்டாரென மிகை படக்கூறலால் ஞானகதப் பிரத்தியட்சமென்றும். ஏகமாதல் ஒருப்பி ய பிரியமாதலே. எல்லாவிடத்தும் எம்மைக்காண்டல் பார்ப்பானைப் பார்த்தலும், எம்மிடத்தில் எல்லாருங் காண்டல் அங்ஙனம் பார்ப் பானையன்றித் தினைத்துணையும் வேறில்லாமையுமாம். இங்ஙனமாய நிற்றையென்பது கருத்து. எல்லாவிடத்தும் எல்லாரும் என்பவற்றி னும்மை முற்றும்மை. (அகூ)

(அ - கை.)

இவர்கட்கு விதிவிலக்கு இனையவென இக்கவி கூறுகின்றது.

தானேக ஜீகியுப சாந்தனாய் நின்மலனாய்
வானே முத்தற்றன் வடிவாகு - ஞானி
விடுத்ததொழி லெல்லாம் விலக்காகுமன்றே
எடுத்ததொழி லாசார மாம்.